# கம்பன் கவிதை மலர்





36ஆவது

கம்பன் திருநாள் வெளியீடு

4 - 4 - 1974.



...ம்பன் கழகம் ::

2 73

# உள்ளுறை



## 'முன்னையோர்ப் போற்றல்'

# முன்னுரை

பெரியோர்களே! அன்பர்களே!

வணக்கம்! உலக மகாகவியாய், கவிச்சக்கரவர்த்தியாய், காப்பிய வானில் கதிரவனாய்த் திகழ்பவன் எந்தைபிரான் கம்பன். விஜயாலயசோழன் மகன், கோதண்டராமன் எனப் பெயர் சூடிக்கொண்ட ஆதித்த சோழன் (கி.பி. 871—907) காலத்தில் அவன் மதிப்பிற்கு உரியவனாய் விளங்கியவன் கம்பன்.

கம்பனைப் பெற்ற தந்தையினும் பேணிக்காத்துப் புரந்தவர், இன்று கதிராமங்கலம் எனப் பெயர் வழங்கும், வெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளல். கம்பனின் பல்துறைப் புலமையும், கவிதாசன்னதமும் கற்றோரை எல்லாம் ஈர்த்து நின்றன. முடியுடை வேந்தர்களும், சிற்றரசர்களும், அறச் செல்வர்களும் கம்பனைப் பெரிதும் மதித்துப் போற்றிப் பாராட்டிவந்தனர்.

அவனது பேராற்றற் பெரும்புலமையை அவன் அருளிய 'இராமாவதாரம்' எனப் பெயர்பெறும் இராம காதை, என்றும் பறைசாற்றிக்கொண்டு நின்று நிலவுகின்றது. தமிழ் மொழியின் தனிப்பெருங் காப்பியமான கம்ப ராமாயணத்தை, வெண்ணெய்நல்லூரில், சகாப்தம் 807, கலி ஆண்டு 3986, விசுவாவசு—பங்குனி—4ஆம் தேதி (கி.பி. 886, பெப்ருவரி, 23), புதன் கிழமை, அஸ்த நட்சத்திரத்தில் அரங்கேற்றி வெளியிட்டான். அன்றுமுதல் கம்பனைக் 'கவிச்சக்கரவர்த்தி' என அறிவுலகம் பாராட்டி வருகிறது.

இராமாவதாரம் அரங்கேறிய பங்குனி அஸ்த நாளையே கம்பன் திருநாளாக—ஜன்ம நக்ஷத்திரமாக—மதித்து விழா' எடுத்து வருகிறோம். பங்குனி மாதத்து மகம், பூரம், உத்தரம் ஆகிய மூன்று நாள்களில் காரைக்குடியிலும், பங்குனி அஸ்த நக்ஷத்திரத்தில் நாட்டரசன் கோட்டையில் கம்பன் சமாதி கொண்டெழுந்தருளியுள்ள கம்பன் பள்ளிபடைத் திருக்கோயிலிலும் இலக்கியப் பெருவிழாவாகக் கம்பன் திருநாளைக் கொண்டாடி மகிழ்கிறது கம்பன் கழகம்.

இவ்விழா எவ்விதமான சாதி, சமய, மொழி வேறுபாடின்றி யாவரும் கலந்துகொள்ளும் அருமையுடையதாகும், புலவர்களும், கவிஞர்களும், கலைஞர்

களும், திறனாய்வாளர்களும், ரசிகர்களுமாக ஆயிரக்கணக்கானவர்கள் ஆண்டு தோறும் வந்து கலந்து கம்பன் புகழ் பாடியும், கம்பன் புகழ் பருகியும் பெருமை செய்கின்றனர்.

பல்வேறு துறையறிஞர்களும் அளிக்கும் அறிவுச் செல்வம் காற்றோடு கரைந்துவிடாமல் ஏட்டில் பதிய வைக்கவேண்டுமென்று நல்லன்புடைய அறிஞர் பலர் பல்லாண்டுகளாக வற்புறுத்தி வந்தனர்—வருகின்றனர்.

கம்பன் திருநாட்செலவு ஆண்டுக்காண்டு கூடிக்கொண்டே வரு கிறது. முந்நூற்றைம்பது ரூபாய் அளவில் தொடங்கிய கம்பன் திருநாளின் செலவு, ஆண்டுதோறும் உயர்ந்து, எத்துணைச் சிக்கனமாக நடத்தினும், ரூபாய் பதினாயிரத்திற்கு மேலே வளர்ந்துவிட்டது. விழாச்செலவுக்காக இதுவரை யாரையும் நன்கொடை கேட்டு அணுகியதில்லை. நிலையறியும் உடனுறை நல்லன்பர்கள் தாங்களாகவே உவந்தளிக்கும் நன்கொடை, செலவின் ஒரு சிறு பகுதியையே ஈடு செய்கிறது. எனவே, கவிதை—உரை முதலியவற்றை அச்சிட இயலாத நிலையில் இருந்து வந்தோம்.

நாளுக்கு நாள் அன்பர்களின் வற்புறுத்தல் வலுக்கத்தொடங்கியது. அத்தகைய வற்புறுத்தலையும் அதனால் எய்தும் பயனையும் மதித்து, இவ்வாண் டில் கவியரங்கேறும் கவிதைகளை முன்னதாகவே பெற்று, 'கம்பன் கவிதை மலர்' என்னும் பெயரில் வெளியிடுவதென முன் வந்தோம். ஆனால், எதிர் பாராதபடி காகிதப்பஞ்சமும், காகிதவிலை, அச்சுக்கூலி விகிதமும் திடுக் கிடச் செய்துவிட்டன!

இந்நிலையில் கம்பன்பால் அன்பும் அடியேன்பால் பரிவும் கொண்ட தொழில்துறை அதிபர்களான கோவை திரு. ஜி. கே. சுந்தரம் அவர்கள், சென்னை திரு. ஏ. எம். எம். அருணசலம் அவர்கள் போன்ற அன்புள்ளம் படைத்த சிலர், விளம்பரங்கள் தந்து முயற்சியை ஊக்குவிக்க முன் வந்தனர். இவர்களுக்கெல்லாம் எளியேன் என்ன கைம்மாறு ஆற்ற வல்லேன்! என்னப்பன் கம்பனும், அவன் பரவிய பரம்பொருளும் இவ் அறவோர்கட்கும் இவர்களின் தொழிற்றுறைகளுக்கும் எல்லா நலன்களையும் வளங்களையும் அருளிக் காத்தருள வேண்டுமென்று மன மொழி மெய்களால் வணங்கி மன மார வேண்டி நிற்கிறேன்.

வரும் ஆண்டுகளில் திருநாள் நிகழ்ச்சிகள் யாவையும் தொகுத்து நூல் வடிவாக்கி நிலைபெறச் செய்ய வேண்டுமென்ற அன்பர் பலருடைய வும், எங்களுடையவுமான எண்ணம் ஈடேற அன்பர்கள் துணையும் ஆண்டவன் அருளும் நிரம்பக் கிடைக்க வேண்டும்.

இவ்வாண்டுக் கம்பன் திருநாட்கவியரங்கின் முறையும் பொருளும் புதியவை. இதுவரையிற் கம்பனைப் பற்றியோ அவன் படைப்புக்களைப் பற்றியோதான் கவிஞர்கள் கவிதை யாத்துக் கவியரங்கேற்றி வந்தார்கள். அவருள்ளும் ஒருசிலர் மேடைக்கு வந்த பின்னரே கவிதையைக் காட்டுவர்.

கவிவாணர் யாவரும் தம்மைக் கம்பனாகவே பாவித்துக்கொண்டு தமதுரை அவனுரையாக அமையக் கவிதை யாத்து அரங்கேற்ற வேண்டுமென்பது இவ்வாண்டின் ஏற்பாடு. பொருளோ, கம்பனுக்குக் கைகொடுத்து உதவிய அறவோர்களும் புலவர்களுமாகிய முன்னையோரைப் போற்றிப் புகழ்தலாகும்.

இந்தப் புதுமுறையை மகிழ்வுடன் ஏற்றுக் கவிதைகளை ஆக்கி உபகரித்த கவிஞர், கவியரங்கத் தலைவர் ஆகிய யாவருக்கும் நெஞ்சார்ந்த நன்றியை உரிமையாக்குகின்றேன்.

குறைந்த கால அளவில் இம்மலரை அழகுற அச்சியற்றித் தந்தனர் தேவி அச்சகத்தினர். இதற்கு உறுதுணையாக மகாவித்துவான் மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை அவர்களும், பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன் அவர்களும், வித்துவான் கா. பெ. ஞானசம்பந்தன் அவர்களும், பழ. பழநியப்பன் அவர்களும் இருந்தார்கள். இவர்களுக்கெல்லாம் மனமார்ந்த நன்றி.

இம்மலருக்கு விளம்பரம் உதவிக் கம்பன் திருநாள் செழிக்க உதவிய அன்பர்களுக்கும் நிறுவனங்களுக்கும் வாழ்த்துடன் வணக்கம் கூறி நன்றி செலுத்துகிறேன்.

எல்லா வகையிலும் முன்னரும் பின்னரும், கம்பன் திருநாளுக்கும் கம்பன் திருப்பணிகட்கும் உதவிய—உதவிவருகிற—அறவுள்ளம் படைத்த பெரியோர்—அன்பர் யாவருக்கும் என்றும் மறவா நன்றியுடன் பணிவார்ந்த வணக்கம் செலுத்துகிறேன்.

அன்பும் பணிவுமுள்ள,

**கம்பன் அடிப்பொடி**
செயலாளன்,
கம்பன் கழகம்.

*கம்பன் மணி மண்டபம்,*
*காரைக்குடி—623002*
*4—4—1974*

# தமிழ்த்தாய் மலர் வணக்கம்

## கம்பன் அடிப்பொடி

காப்பு

ஓங்கலிடை வந்து உயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலி நீர்ஞாலத்துஇருள் கடியும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனிஆழி வெங்கதிர்ஒன்று ; ஏனையது
தன்னேர் இலாத தமிழ்.

* * *

அகர மொழிக்கோர் அன்னாய் போற்றி!
பகரும் மொழிகளுள் பழையாய் போற்றி!
மலையம் தந்த மகளே போற்றி!
சங்கம் வளர்த்த தையால் போற்றி!
மூன்று கவடாய் முளைத்தாய் போற்றி! 5
சான்றோர் நாவில் தவழ்ந்தாய் போற்றி!
பஃறுளிப் பழநதி படிந்தாய் போற்றி!
அஃகிய குமரிநீர் அருந்தினை போற்றி!
கன்னி வையைக் கரும்பே போற்றி!
பொன்னித் துறைதவழ் போதே போற்றி! 10
தண்ணிய பொருநைத் தவமே போற்றி!
புண்ணிய நதிஎலாம் பொலிவாய் போற்றி!
தென்னவன் கூடலில் செழித்தாய் போற்றி!
சென்னிதன் உறந்தையில் சிறந்தாய் போற்றி!
வில்லவன் வஞ்சியில் மிளிர்ந்தாய் போற்றி! 15
பல்லவன் காஞ்சியில் படர்ந்தாய் போற்றி!
வில்புலி கயற்குறி மேவினாய் போற்றி!
பல்திணை துறைகளாய்ப் பரவினாய் போற்றி!
எண்ணாய் மொழியாய் இயங்குவாய் போற்றி!
ஒலியாய் வரியாய் ஓங்குவாய் போற்றி! 20
அசையாய்ச் சீராய் அமைந்தாய் போற்றி!
தளைஅடி தொடையாய்த் தழைத்தாய் போற்றி!

பாவகை ஐந்தாய்ப் பயின்ருய் போற்றி!
பாவினம் மூன்ருய்ப் படைத்தாய் போற்றி!
பாடலும் உரையுமாய்ப் படர்ந்தாய் போற்றி! 25
நீடுபா சுரமுமாய் நிலேத்தாய் போற்றி!
செய்யுளும் கவியுமாய்ச் செழித்தாய் போற்றி!
துய்யநல் உரைகளாய்ச் சுடர்ந்தாய் போற்றி!
வண்ணமும் சிந்துமாய் வளர்ந்தாய் போற்றி!
நண்ணுபல் சந்தமாய் நடந்தாய் போற்றி! 30
சித்திரக் கவிநலம் செறிந்தாய் போற்றி!
வித்தகக் கலேபல வேய்ந்தாய் போற்றி!
செவிநுகர் கனிகளாய்த் திகழ்ந்தாய் போற்றி!
புவிமகிழ் அணிவளம் பூண்டாய் போற்றி!
சாத்திரம் பலப்பல தந்தாய் போற்றி! 35
தோத்திரப் பாடலில் துணேயிலி போற்றி!
எண்எழுத் திரண்டும் ஈந்தாய் போற்றி!
பண்முறை. கண்ட பழையாய் போற்றி!
பல்கலே அகத்தியற் பயந்தாய் போற்றி!
தொல்காப் பியனேத் தோற்றினுய் போற்றி! 40
யமிபவ ணந்தியை ஈன்ருய் போற்றி!
அமிதசா கரனே அளித்தாய் போற்றி!
பரணனேக் கபிலனேப் படைத்தாய் போற்றி!
மருதனே ஆந்தையை வளர்த்தாய் போற்றி!
சாத்தனேக் கீரனேத் தந்தாய் போற்றி! 45
கூத்தனேக் கணியனேக் கொடுத்தாய் போற்றி!
அவ்வையைச் செள்ளேயை அருளினுய் போற்றி!
செவ்விய பொன்முடி சேர்த்தாய் போற்றி!
வள்ளுவம் மணக்கும் மலரே போற்றி!
ஒள்ளிளங் கோவை உதவினே போற்றி! 50
ஆழ்வார் நாவில் அமர்ந்தாய் போற்றி!
நால்வர் வாக்கில் நடந்தாய் போற்றி!
மொய்ம்புடை மூலனே முகிழ்த்தாய் போற்றி!
கம்பனேப் படைத்த கடவுளே போற்றி!
சேக்கிழார்க் கருளிய செல்வீ போற்றி! 55
மாக்கவி பாரதி மகிழ்ந்தாய் போற்றி!
எண்ணிலாப் புலவரை ஈந்தாய் போற்றி!
விண்ணளவு உயர்கலே விரித்தாய் போற்றி!
எட்டுத் தொகைகொளும் எம்மோய் போற்றி!
பத்துப் பாட்டுடைப் பாவாய் போற்றி! 60

அறவோர் நெஞ்சில் அமர்ந்தாய் போற்றி!
மறவோர் தோளில் வயங்குவாய் போற்றி!
மன்னவர் மாட்சியில் மன்னுவாய் போற்றி!
கன்னியர் கற்பில் களிப்பாய் போற்றி!
இசைப்போர்ச் சுருதியாய் இலங்குவாய் போற்றி! 65
உழைப்போர்க் கார்வமாய் உள்ளாய் போற்றி!
சிவநெறி யதனுள் சிவமே போற்றி!
பவமறு வைணவப் பணிவே போற்றி!
அருகர் மதத்துநல் அறமே போற்றி!
அருள்சாக் கியத்துள் அன்பே போற்றி! 70
ஆசில்வே தாந்தத்து அறிவே போற்றி!
ஏசுவின் கருணை ஏத்துவாய் போற்றி!
அல்லா மாண்பினை அறைவாய் போற்றி!
எல்லா நெறிக்கும் இடனே போற்றி!
விண்முதல் ஐந்தின் வீறே போற்றி! 75
கண்முதல் பொறிகளின் கதியே போற்றி!
முன்னுறு பழைமையில் மூத்தாய் போற்றி!
பின்வரு புதுமையின் பேர்த்தியே போற்றி!
மானிடம் தன்னெடும் வந்தாய் போற்றி!
சீனர்தம் நாட்டிலும் திகழ்வாய் போற்றி! 80
ஊழிதோ றூழி உலவாய் போற்றி!
ஏழிசை வகுத்த எம்மோய் போற்றி!
இயல்இசை நாடக எழிலாய் போற்றி!
பயிலியம் பற்பல படைத்தாய் போற்றி!
தண்ணுமை குழல்யாழ் தழுவுவாய் போற்றி! 85
மண்ணுயர் பரதநூல் வழங்கினுய் போற்றி!
எழுவகை அளவைசொல் மொழிநலாய் போற்றி!
வழுவிலாக் கணிதம் வகுத்தாய் போற்றி!
இலக்கியச் செறிவில் இணையிலி போற்றி!
இலக்கணப் பெருவளம் இயைந்தாய் போற்றி! 90
விலக்கரும் மரபெலாம் விரித்தாய் போற்றி!
இலக்கமார் தனிமொழி எனவுளாய் போற்றி!
காலம் கணிக்கொணுக் கவினே போற்றி!
ஞாலம் புகழ்மொழி நாயகி போற்றி!
மொழியுடு பதிஎனும் முழுமதி போற்றி! 95
பிழிசுவை நறுமணப் பிரசமே போற்றி!
நாற்பொருள் நூற்பயன் நாட்டுவாய் போற்றி!
ஏற்றமார் அன்பறம் இருகணுய் போற்றி!

நல்லவர் வாழ்கென நவில்வாய் போற்றி!
அல்லவர் நல்லவர் ஆக்குவாய் போற்றி! 100
யாவதும் நமதூர் என்ருய் போற்றி!
யாவரும் உறவென இசைத்தாய் போற்றி!
சேய்மொழி பலவாற் செழித்தாய் போற்றி!
தாய்மொழி, கன்னித் தமிழே போற்றி!
உலகொரு குலமென உரைத்தாய் போற்றி! 105
நிலமிசை அமர்ந்தருள் நிமலாய் போற்றி!
செந்தமிழ்த் தாயாம் தெய்வமே நின்றன்
திருவடித் தாமரை போற்றி ; போற்றி! 108

வாழ்த்து

கம்பன் அறநிலேயும் கற்பிற் சிறந்தோரும்
நம்பித் தினம்பரவும் நல்ல தமிழ்த்தாயின்
செம்பதுமத் தாள்மலரில் சென்னிதனேச் சேர்த்து
வம்பார் மலர்தூவி வாழ்த்தி வணங்குதுமே!

---



---

# தமிழ்த்தாய் திருப்பள்ளி எழுச்சி

## "கம்பன் அடிப்பொடி"

இந்திரன் திசையினில் எழுந்தனன் அருணன்;
எழில்மிகு கன்னியர் இரட்டினர் கவரி;
தந்தவை கறைமலர் தனிமணம் பரப்பும்;
தாமரை மலரினம் தளையவிழ் கின்ற;
முந்திய சங்கினம் முழங்கின எங்கும்;
முரசுடன் காகளம் பெரிதொலி கூட்டும்;
சிந்தையும் இனித்திடத் திகழ்தரும் அன்ஞய்!
செந்தமிழ்த் தாய்பள்ளி எழுந்தரு ளாயே! 1

உறங்கிய மரனெலாம் உயிர்த்தன; யாண்டும்
ஊதைகள் சொரிந்தன உயிருறும் அமுதம்;
புறந்தரு பறவைகள் பொம்மென ஆர்த்துப்
பொழிலவை நீத்திரை தேடிடப் பறந்த;
பிறங்கிய இருட்கணம் பிரிவுறல் கண்டு
பெருந்தொழில் உழவர்கள் விரைந்தனர் கழநி;
சிறந்துயர் எண்ணெழுத் திலக்கமும் செறிந்தாய்!
செந்தமிழ்த் தாய்பள்ளி எழுந்தரு ளாயே! 2

தண்ணுமை யாழ்குழல் தழுவியொ லிக்கத்
தமிழ்மறை ஓதுநர் குழுமிநிற் கின்ருர்;
வண்ணநல் மலர்நிறை வட்டில்கள் தாங்கி
மாதர்கள் பற்பலர் வந்துநிற் கின்ருர்;
கண்ணடி முதலிய கைம்மலர் ஏந்திக்
காரிகை யார்பலர் காத்துநிற் கின்ருர்;
திண்ணிய இலக்கணச் செறிவுடை அன்ஞய்!
செந்தமிழ்த் தாய்பள்ளி எழுந்தரு ளாயே! 3

அகத்தியன் காப்பியன் அருகுநிற் கின்ருர்;
அறந்தரு வள்ளுவன் அருள்நிறை இளங்கோ

மகத்தெனும் காப்பியம் வடித்தருள் கம்பன்
வளருநின் கோயிலின் மருங்கிருக் கின்ருர்;
தொகைத்தமிழ்ப் புலவர்கள் துறைதிணை பாடிச்
சூழ்ந்துநின் திருவருள் தோய்ந்துநிற் கின்ருர்;
செகத்தொரு நிகரிலை எனத்திகழ் அன்னுய்!
செந்தமிழ்த் தாய்பள்ளி எழுந்தரு ளாயே! 4

எழுதரும் ஓவியம் எனமிளிர் மாதர்
எட்டெனும் மங்கலம் ஏந்திநிற் கின்ருர்;
முழுமதி பொருநிற முதிர்பசு நின்றன்
முன்றிலில் கன்றுடன் நின்றது கண்டாய்;
தொழுதுநின் திருவடி துதிசெய நல்ல
தொண்டர்கள் பற்பலர் சூழ்ந்துநிற் கின்ருர்;
செழுமையும் இழுமையும் சேர்ந்தொளிர் அன்னுய்!
செந்தமிழ்த் தாய்பள்ளி எழுந்தரு ளாயே! 5

கண்ணிணை கைமுகம் கருத்தொடு ஒன்றிக்
கவின்நடம் புரிதர நூபுரக் காலின்
நுண்ணிடை மடந்தையர் நோற்றுநிற் கின்ருர்;
நுவலரும் பற்பல நுண்கலை வல்லார்
எண்ணிலர் நின்னருள் எய்தவந் துள்ளார்!
எழில்மிகு கூதிரில் இனிதெழும் அமுதத்
தெண்ணில வெனமுகம் திகழ்தரும் அன்னுய்!
செந்தமிழ்த் தாய்பள்ளி எழுந்தரு ளாயே! 6

சந்தனம் மான்மதம் புனுகுசவ் வாது
தண்மணம் தருபவை தாங்கினர் ஒருபால்;
சிந்துரம் குங்குமம் அஞ்சனம் மற்றும்
சிறந்தஒ மாலிகை சுமந்தனர் ஒருபால்;
சந்திர சூரியர் தம்மொளி மழுங்கத்
தகத்திடும் அணிகலன் தாங்கினர் ஒருபால்;
சிந்தையொடு உன்பணி செய்திட நின்ருர்
செந்தமிழ்த் தாய்பள்ளி எழுந்தரு ளாயே! 7

பள்ளிகல் லூரியில் பயின்றிடு வோரும்
பற்பல கைத்தொழில் பழகுகின் ருேரும்
எள்ளரு மதிநிறை எழிற்குரு மாரும்
இலக்கிய இலக்கண இரும்புல வோரும்

கள்ளெனக் கவிகதை காப்பியம் தருவோர்
கருதுநல் விமர்சனம் கட்டுரை வரைவோர்
தெள்ளிய நின்னருள் தேடிவந் துள்ளார்
செந்தமிழ்த் தாய்பள்ளி எழுந்தரு ளாயே! 8

பற்பல மொழிவலர், பல்கலைச் செல்வர்,
பணிபல புரிகுநர், பரிவுடை நெஞ்சர்,
அற்புத மெனவளர் அன்னைநின் செய்ய
அடிமலர் தொழுதருள் அடையவந் துள்ளார்
முப்பழம் பால்நறும் தேன்இள நீரும்
முதிரைகள் சர்க்கரை முதலிய யாவும்
திப்பிய முறையில்நின் திருமுனம் படைத்தோம்
செந்தமிழ்த் தாய்பள்ளி எழுந்தரு ளாயே! 9

பலவகை மதநெறி பரவற வோரும்
பற்றவை முற்றறு பருணிதர் தாமும்
இலையொரு முழுமுதல் எனுநிலை யோரும்
இறைவிநின் பதயுகம் ஏத்திட வந்தார்;
உலகினில் வளர்தரும் உயர்கலை யாவும்
உனதடி தரவல உரவரும் நின்றார்;
சிலைதவழ் திருநுதல் திலகம துள்ளாய்!
செந்தமிழ்த் தாய்பள்ளி எழுந்தரு ளாயே! 10



# கம்பன் மலர் வணக்கம்

## '' கம்பன் அடிப்பொடி ''

காப்பு

உலகம் யாவையும் தாம்உள ஆக்கலும்,
நிலைபெ றுத்தலும், நீக்கலும் நீங்கலா,
அலகி லாவிளை யாட்டுடை யார்அவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே.

* * * *

திருவழுந் தூர்வரு தேவே போற்றி
அருள்வழி உணர்த்துபே ரந்தண போற்றி
தமிழ்தவம் செய்தமா தவமே போற்றி
அமிழ்தினும் இனியசொல் அருளினாய் போற்றி
உலகமா கவிஎன ஒளிர்வாய் போற்றி 5
கலைகளின் பெருங்கடல் கடந்தாய் போற்றி
பொன்னித் துறைதவழ் புனிதா போற்றி
கன்னித் தமிழ்த்திறம் காட்டினாய் போற்றி
முத்தமிழ்த் துறையின் வித்தகா போற்றி
சித்தம் அழகிய சேவக போற்றி 10
இதிகா சத்துறை ஏறே போற்றி
விதிவலி உணர்த்தும் மதிவலாய் போற்றி
சாத்திரம் நன்குணர் சதுரா போற்றி
பாத்திரம் சுவைசெயும் பாவலா போற்றி
புவிமுழு தளந்த புலவனே போற்றி 15
கவிஞருள் ஓங்கிய கலைஞனே போற்றி
மாயாப் புகழொடு வாழ்வாய் போற்றி
தாயாய் அறத்தைத் தாங்குவாய் போற்றி
பெண்மைக் குயர்வு பேணுவாய் போற்றி
உண்மைக் குருவம் உதவினாய் போற்றி 20
நடையில் நின்றுயர் நாயகா போற்றி
சடையன் புகழ்விரி தலைவா போற்றி
இடைஉயிர் முறைஅறி எம்மான் போற்றி
பொறைசயத் துறைஎனும் புனிதா போற்றி
கற்பனைத் திறம்பல கவித்தாய் போற்றி 25

அற்புதம் படைக்கும் அரசே போற்றி
காவிய வானக் கதிரவா போற்றி
ஓவியக் கவிதைக் கொருவனே போற்றி
விருத்தக் கவிக்கொரு வேந்தே போற்றி
கருத்துப் புரட்சிக் கவிஞனே போற்றி 30
என்றுமுள தென்தமிழ் இயம்பினுய் போற்றி
தென்றலைப் புலியாச் செய்வாய் போற்றி
இராமாவ தாரம் ஈந்தாய் போற்றி
பராவருங் கவிவலம் படைத்தாய் போற்றி
வான்மிக மணிக்கொளி வழங்கினுய் போற்றி 35
கோன்மை நெறிஉணர் கொற்றவா போற்றி
வெண்ணெய் வளர்த்த விளக்கே போற்றி
மண்ணில் வாழ்ந்த வானவா போற்றி
அலகிலா விளையாட் டறிவே போற்றி
உலகெலாம் போற்றும் உத்தமா போற்றி 40
பெருமையே வடிவாய்ப் பிறங்குவாய் போற்றி
அருமையைச் சொல்லில் அமைத்தாய் போற்றி
பலகலை ஆர்ந்த பனிமதி போற்றி
உலகம் பொதுஎன உரைத்தாய் போற்றி
அனைத்துயர் காப்பியம் ஆக்கினுய் போற்றி 45
மனத்துவம் நன்குணர் மன்னவா போற்றி
மாயா சனகனை வடித்தாய் போற்றி
தோயாத் துறையிலாத் தோன்றலே போற்றி
தத்துவ நிலைதெரி சத்துவா போற்றி
சித்திரம் எனக்கவி தீட்டினுய் போற்றி 50
வள்ளுவன் நெறிசெலும் வள்ளலே போற்றி
ஒள்ளிய துணர்ந்தநல் உணர்வோய் போற்றி
காவிரி நலமுணர் காதலா போற்றி
பாவிகம் முழுதுணர் பருணிதா போற்றி
மெய்ப்பா டுணர்ந்திடும் விபுதா போற்றி 55
துய்ப்பார்க் கினித்திடும் சொல்வலாய் போற்றி
பவித்திரப் பெருங்கதை பகர்ந்தாய் போற்றி
செவிக்குறு தேன்பொழி செம்மலர் போற்றி
மக்களுக் குரிமை வரித்தாய் போற்றி
தக்கநற் கவிதைத் தச்சனே போற்றி 60
நுண்கலை உணர்த்திடும் நூலோய் போற்றி
வண்கவிச் சக்கர வர்த்தியே போற்றி
கல்வியிற் பெரிய கடலே போற்றி

செல்நெறி காட்டும் தேசிகா போற்றி
அமர காவிய அமுதே போற்றி 65
சமரம் காட்டலில் சமனிலி போற்றி
செந்தமிழ்க் குயர்வருள் செம்மலே போற்றி
அந்தமில் சுவைபொழி அண்ணல் போற்றி
உலகுடன் பிறப்பென உணர்த்தினை போற்றி
விலகலாப் பொருளுரை மேலாய் போற்றி 70
வேதாந் தப்பொருள் விரித்தாய் போற்றி
நாதாந் தத்துறை நாவலா போற்றி
அழுக்கறு நெறிதரும் அறவோய் போற்றி
ஒழுக்கம் பேணிடும் ஒண்தவா போற்றி
கற்பு நெறிக்கொரு காவலா போற்றி 75
சொற்பொருள் கணித்த தூயோய் போற்றி
திருக்குறள் விரிவுரை செய்தாய் போற்றி
மருட்கொளா நெறிவளர் மாண்போய் போற்றி
துன்பிலே சுகமெனச் சொன்னாய் போற்றி
அன்பதே ஆக்கம்என் றறைந்தாய் போற்றி 80
கவியினும் கனிஎனும் கண்ணே போற்றி
செவிநுகர் கனியருள் சிற்குணா போற்றி
படைக்கலப் பரிசுணர் பண்பனே போற்றி
அடைக்கலம் காக்குநல் அருளோய் போற்றி
ஆன்றவிந் தடங்கிய ஐயா போற்றி 85
சான்றவர் இனத்தொரு தக்கோய் போற்றி
அம்பிகா பதிதரும் அத்தா போற்றி
கும்பிட்டு வாழ்கிலாக் குலபதி போற்றி
அந்தியைக் காலன் ஆக்குவாய் போற்றி
சந்தமார் சுவைவளம் தந்தாய் போற்றி 90
நாடக அணிக்கொரு நாதா போற்றி
வீடுறு நெறியதும் விளைத்தாய் போற்றி
மறைப்பொருள் விளக்கிடும் மாதவா போற்றி
பிறப்பெலாம் சமனெனப் பேசுவாய் போற்றி
தமிழ்ப்பண் பாட்டின் தாயே போற்றி 95
நிமிர்கடன் உணர்த்தும் நெறிவலா போற்றி
யாரொடும் பகைகொளல் என்றாய் போற்றி
போரொடுங் கிடவழி புகன்றாய் போற்றி
மக்களே உயிர்என வகுத்தாய் போற்றி
மன்னனை உடலென மாற்றினாய் போற்றி 100

அறிவினுக் கறிவினை அறிவாய் போற்றி
செறிபெருங் கேள்விச் செல்வா போற்றி
சமய நோக்கினில் சமரசா போற்றி
குமரித் தமிழ்க்கொரு கோவே போற்றி
மானிடப் பெருமை வளர்த்தாய் போற்றி 105
தேனிசைத் தமிழின் தெய்வமே போற்றி
நாட்டரசன் கோட்டை நயந்தாய் போற்றி
போற்றி கம்பனே போற்றி போற்றி! 108

உன்னை உள்ள படியறியேம்;
உலகை உள்ளத் திறமுள்ளேம்;
பின்னை அறியேம், முன்னறியேம்,
இடையும் அறியேம்; பிறழாமல்
நின்னை வணங்கி நீவகுத்த
நெறியில் நிற்கும் அதுஅல்லால்,
என்னை அடியேம் செயற்பால?
இன்பம் துன்பம் இல்லானே!

வாழிதமிழ் நாகரிகம் வாழிதமிழ்ப் பண்பாடு
வாழிதமிழ் வேதமருள் வள்ளுவனர்—வாழியரோ
இன்பம் பெருக இருசெவியும் தேன்பாய்ச்சும்
கம்பனும், எங்கள் கவி.



# கம்பன் யார்?

## " கம்பன். அடிப்பொடி "

உள்ளத்தின் ஒளியைக் கூட்டி, உணர்வினில் தெளிவை ஊட்டி,
கள்ளத்தை இல்லாது ஓட்டி, கடமையோ டுரிமை காட்டி,
பள்ளத்தில் கிடப்பார் எல்லாம் பதம்பெற அறத்தோடு அன்பு
வெள்ளத்தைப் பாய்ச்சி நிற்கும் விபுதனே கம்பன் என்பான்! 1

பாரினில் உருவாய், அருவாய், பரந்துபல் நிலையாய் உள்ள
நீரியல் கூறு வான்போல் நிறைபரம் பொருளின் தன்மை
சீரிய முறையில் நந்தம் சிந்தையில் பதியச் செப்பும்
சூரியஞானி யன்றோ கோக்கவி கம்பன் என்பான்? 2

நுண்ணணு நூற்றோர் கூற்றின் நுவல்பெயர் 'கோண்'ஆம் என்றும்,
எண்இரு பத்தி ரண்டே இயம்பு'முக் கோடி' என்றும்,
நண்ணிடு கணித நுட்பம் நயம்பட உணர்த்தி நிற்கும்
புண்ணியப் புலவ னன்றோ பொருவிலாக் கம்பன் என்பான்? 3

தாவர வகையை முற்றும் தரம்பிரித் துணர்த்தும் போதும்,
மேவிய உயிரி னத்தின் விரிவெலாம் காட்டும் போதும்,
பூவியல் பொருளை எல்லாம் புரியுமா கூறும் போதும்,
'ஆ!'வென வியக்க வைப்பான் அருங்கவிக் கம்பன் என்பான்! 4

வேதங்கள் ஆக மங்கள் விளங்குப நிடதம் கீதை
ஓதுபல் சாத்தி ரங்கள் உயர்ந்தநற் காப்பி யங்கள்
யாதுள துலகில் அந்நாள் யாவையும் கற்றுத் தேர்ந்த
தீதறு கலைஞன் அன்றோ செம்புலக் கம்பன் என்பான்? 5

அகத்தியம் முதல வான அருந்தமிழ் நூல்க ளோடு
தொகைப்படு பாடல் பாட்டும் துரிசற ஆய்ந்து மற்றும்
மிகப்பெருங் கலைக ளாக விளங்கிசை, பரதம், சிற்பம்,
வகைபல தெளிந்தோன் அன்றோ மாக்கவி கம்பன் என்பான்? 6

வள்ளுவன் அறமாம் நூலில் வகைதெரிந் தெடுத்துக் கோத்த
தெள்ளிய தமிழ்ப்பண் பாடாம் செறிநிற மணிகள் காந்தும்
ஒள்ளிய ஆரம் சூட்டி உயர்பதம் தமிழ்க்குத் தந்த
வள்ளலாய் வாழ்வோன் அன்றோ மதிக்கவி கம்பன் என்பான்? 7

சாந்தொடு தேனும் யாழும் தண்கதிர் மலரும் கூட்டி
ஏய்ந்தஜம் பொறியும் மாந்தி இன்பமே கொண்டு துள்ளத்
தீந்தமிழ்த் தாய்க்கு வாய்த்த திருமுடிக் காப்பி யத்தை
ஈந்தருட் கொடைஞன் அன்றோ எம்பிரான் கம்பன் என்பான்? 8

பாவிகம் முற்றும் தேர்ந்த பருணிதக் கலைஞர் எல்லாம்
காவிய அமைப்புக் கேற்ற கட்டளை இஃதே என்ன
மேவிய இராம காதை வியனுல கேத்தத் தந்த
ஓவியப் புலவன் அன்றோ ஓங்கறக் கம்பன் என்பான்? 9

இத்தகை ஆற்றல் யாவும் எவர்தர வந்த? அந்த,
மொய்த்தநற் புலமை வாய்ந்த முன்னையோர் தம்மை எல்லாம்
சித்தமார் நன்றி யோடு தினந்தினம் போற்று கின்ற
உத்தமப் புலவன் அன்றோ உலகெலாம் அளந்த கம்பன்? 10



# அடியெனை அடிமைகொள் அது எதுவோ?

## ''கம்பன் அடிப்பொடி''

நரைசிறி திலெனை வளர்சிகையோ?
நவைஇலை எனஒளிர் விரிநுதலோ?
அருள்ஒளி குளிர்தரும் இணைவிழியோ!
அமுதுகு கனிஇதழ் மலர்வாயோ?
விரைநிறை திரளிரு வளர்புயமோ?
மிளிர்எழு எனநிமிர் இருகரமோ?
அரதன மணிவடம் தவழ்உரமோ?
அடியெனை அடிமைகொள் அதுஎதுவோ? 1

சதுரநல் வடிவமை குடங்கையதோ?
சவிநிறை மணியன உகிரவையோ?
துதிபெறும் அரசிலை பொருவயிறோ?
துகளுறும் உடைதிகழ் இடையதுவோ?
முதிர்அகில் எனஒளிர் தொடையவையோ?
முரல்வரு கயல்நிகர் இருகழலோ?
அதிநிற மலர்புரை பதயுகமோ?
அடியெனை அடிமைகொள் அதுஎதுவோ? 2

செவிநுகர் கனியருள் திறனேயோ?
திருமறை நெறிபயில் உளமேயோ?
உவநிட முழுதுணர் உயர்வேயோ?
உலகொரு குலமெனும் உணர்வேயோ?
புவிமுழு தளவிடு புலனேயோ?
புகலருள் அறமுரை நெறியேயோ?
அவிநய முதல்வளர் கலையேயோ?
அடியெனை அடிமைகொள் அதுஎதுவோ? 3

மணி—மணி எனஒலி ஒளிர்மொழியோ?
மனிதரை அளவிடு மதிவழியோ?
பணிமுதல் உயிரினம் கணிநெறியோ?
பவுதிக முதல்நிமிர் கலைநிறைவோ?

துணிபொருள் உயிர்நிலை சொலுமுறையோ?
துரிசறு நெறிபல தெரிதரலோ?
அணுவையும் அலகிடும் அறிவதுவோ?
அடியெனை அடிமைகொள் அதுஎதுவோ? 4

மறையுடன் கலைகளின் நிலையுறவோ?
மனுமுதல் அறமுணர் திறமதுவோ?
இறையதன் தனிநிலை உணர்தரவோ?
இசையொடு பரதமும் உரைவலமோ?
செறிவுடை நிலவியல் தெளிமதியோ?
செடிகொடி இயல்தெரி தெருளதுவோ?
அறிவினுள் அறிவினை அறிபுலமோ?
அடியெனை அடிமைகொள் அதுஎதுவோ? 5

உளவியல் நனியுணர் தனிமதியோ?
உயிரதன் உயிரினை உணர்திறமோ?
களவியல் அறம்புணர் கவினதுவோ?
கதிர்முதல் வெளியின கணிமுறையோ?
மளமள எனஉதிர் கவிவலமோ?
மரபது பிறழ்கிலை எனுமியல்போ?
அளவியல் கவிபல அருள்நிலையோ?
அடியெனை அடிமைகொள் அதுஎதுவோ? 6

இருமையும் பெறஅருள் கதைநிறைவோ?
எழில்ரகு பதிமுதல் கலனடைவோ?
பொருகள வருணனை புரிதிறமோ?
பொதுஎன உலகினை உரையறமோ?
வருபுனல் அதுகொடு மறைமுதலை
மனம்நிறை கொளஉரை பதிஉணர்வோ?
அருமையுள் அருமையை அறிபவனே!
அடியெனை அடிமைகொள் அதுஎதுவோ? 7

உயர்வற உயர்கவி தருமெழிலோ?
உலகுள பொருளள விடுமதியோ?
உயிருடல் உறவுரை உரனதுவோ?
ஒழுகியல் நெறிபுகல் தகவதுவோ?
செயிரற அருள்நெறி தெளிதரவோ?
திகழ்மத சமரச தரிசனமோ?

அயர்வற அமுதுகு கவிவலவ!
அடியெனை அடிமைகொள் அதுஎதுவோ? 8

குறுமுனி அருள்கலை செறிமனமோ?
குலவுபல் சுவடிகள் பயில்வளமோ?
மறுவறு நிலைமதி பெறுவளமோ?
வடகலை யொடுபல மொழியறிவோ?
உறுபகை வரையறை செயும்நலமோ?
உவமைகள் தருமிகு மனுபவமோ?
அறுவகை அரசியல் அறிபுலவ!
அடியெனை அடிமைகொள் அதுஎதுவோ? 9

தினைஅள வறிவிலன் எனஅறிந்தும்,
சிறியவன் செயலிலும் எனஉணர்ந்தும்,
பனையினும் மிகஉயர் பருணித! நீ
பரிவது நிறைதரும் எளிமையினல்
எனையுநின் அடியவன் எனஉடையாய்.
எவையினும் உயர்தமிழ்ப் பெருமைகளே
நினைவினில் நிலைபெற உதவுகம்ப!
நினதிரு வடிமலர் சரணெனக்கே! 10



# கம்பன் திருநாள்—கவியரங்கம்

4-4-1974 வியாழன் முற்பகல் 9-30

செயலாளன் வரவேற்பு : "கம்பன் அடிப்பொடி"

தலைப்பு : **முன்னையோர்ப் போற்றல்**

தலைவர் : **கி. வா. ஜகந்நாதன்**

| | போற்றப்படுவோர் | | கவிஞர் |
|---|---|---|---|
| 1. | உபநிடத முனிவர் | .. | திரு. அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார் |
| 2. | அகத்தியர் | .. | திரு. கம்பராமன் |
| 3. | வான்மீகி | .. | திரு. ப. ஜனார்த்தனம் |
| 4. | அவ்வையார் | .. | திரு. அரங்க சீனிவாசன் |
| 5. | கபில-பரணர் | .. | திரு. ரெ. முத்துக் கணேசன் |
| 6. | கீர-மருதர் | .. | திரு. தமிழண்ணல் |
| 7. | வள்ளுவர் | .. | திரு. அர. சிங்காரவடிவேலன் |
| 8. | இளங்கோ | .. | திரு. அப்துல் ரகுமான் |
| 9. | கொங்குவேள் | .. | திரு. ம. வெ. பசுபதி |
| 10. | காரைக்காலம்மை | .. | திரு. சித்தன் |
| 11. | ஆழ்வார்கள் | .. | திரு. க. தேசிகன் |
| 12. | மூவர் முதலிகள் | .. | திரு. சொ. சொ. மீ. சுந்தரம் |

# செயலாளன் வரவேற்பு

### இறை வணக்கம்

உலகம் யாவையும் தாமுள ஆக்கலும்,
நிலைபெ றுத்தலும், நீக்கலும், நீங்கலா—
அலகி லாவிளை யாட்டு உடையார்அவர்
தலைவர்; அன்னவர்க் கேசரண் நாங்களே!

### தமிழ்த்தாய் வணக்கம்

முன்னைமொழி யாவுக்கும் மூத்த தமிழ்க்கிழவி
கன்னிநிலை மாறுக் கவின்குமரி—இன்னுந்தான்
என்னையிவள் காலம்என யாரும் அறியஒண்ணு
அன்னவள்தாள் சென்னிக்கு அணி.

### கம்பன் வணக்கம்

அன்னையாய், அத்தன் ஆகி, அருளுநல் ஆசான் ஆகி,
பின்னுமெனை ஆண்டு கொண்ட பெருந்தெய்வம் தானே ஆகி,
கன்னியாம் தமிழ்த்தாய் ஈன்ற கவிச்சக்ர வர்த்தி ஆன
என்னுடையன் கம்பன் பாதம் என்றும்என் உச்சிமீதே!

பாவிக வண்ணம் தோய்ந்த பைந்தமிழ்த் தூரி கையால்
ஓவியக் கவிதை தீட்டி ஒப்பிலா இன்பம் கூட்டும்
காவியப் புலவ னுன கவிச்சக்ர வர்த்தி கம்பன்
சேவடிக் கமலப் போது சென்னியில் சூடி வாழ்வாம்.

முத்தமிழ்க் கடலுள் மூழ்கி, முத்தொடு பவளம் வாரி
வித்தகம் பலவும் தோன்ற விதவித அணிகள் பூட்டிச்
சித்திரக் கவிதை வார்க்கும் தேரழுந் தூரான் கம்பன்
உத்தமப் பாதப் போதை உச்சியில் சூடி வாழ்வாம்.

சங்கம் சமைத்த தமிழ்முனிவன் தான்தொடங்கி
பொங்கு தமிழ்வளர்த்த பொய்யில் புலவோர்க்கும்,

ஒன்றுரை ஓட்டி உயர்தமிழைத் துய்த்திடவே
மன்னும் வழிவகுத்த மாகவிஞன் பாரதிக்கும்

நாளுய் அமைந்த தனிப்பாலம் போன்றவனைத்
தேளுய், செவியமுதாய், செந்தமிழைத் தானூட்டி

ஊனை உருக்காமல் உள்ளொளியைத் தூண்டிவிட்டு
ஞான விளக்கேற்றும் நற்கவிதைக் கோவேந்தைச்

சிந்தை செவிக்கன்றிச் சேர்கதிக்கும் நின்றுதவும்
எந்தைபிரான், என்ஆசான், என்தெய்வம் ஆனானைப்

பொன்னித் திருநாட்டில் போற்றும் திருவழுந்தூர்
தன்னிற் பிறந்து சடையன் புகழ்நிலைக்கத்

தென்பாண்டி நாட்டில்உயர் தெய்வப் பனைஅளித்த
பொன்தகட்டால் ஆன புனைஓ வியமாகும்

'இராமாவ தாரம்' எனப்பெயர் பூண்டு
தராதலத்து ஓங்கும் தனிப்பெருங் காப்பியத்தை

வள்ளல் சடையன் வளர்வெண்ணெய் நல்லூரில்
வெள்ளைநிலாப் போன்று விரித்தமணிப் பந்தர்க்கீழ்

எண்ணுசகம் எட்டுநூற் றேழில் இசைகி.பி.
எண்ணூற்றெண் பத்தாறில் எய்துவிசு வாவசுவில்

பங்குனித் திங்கள் பகர்தேதி நான்குபுதன்
தங்குமிருட் பக்கத்தில், சாருமிரண் டாம்பிறையில்,

அந்தத் திருநாளில், ஆன்ற தமிழ்வாணன்,
முத்தமிழ்தேர் வித்தகர்கள், மூவர் முடிமன்னர்,

பாட்டுச் சுவையுணரும் பண்பார் செவிச்செல்வர்,
நாட்டுப் பெருமக்கள், நல்லன்புத் தாய்மார்கள்,

எல்லோரும் கூடி இருந்தருளும் பேரரங்கில்,
நல்லோர்கள் வாழ்த்திசைக்க, நங்கையர்கள் சங்கொலிக்க

ஆறு மணிக்கால் அமைந்தபொன் ஆசனத்தில்
ஏறி இனிதமர்ந்து எம்மருங்கும் சீர்சிறக்க,

கேட்டார் வியப்பெய்த, கேளாரும் வேட்டுநிற்க,
நாட்டிற்கு உரிமைஎன நல்லரங்கம் ஏற்கவைத்து

மன்னக் கவிஎன்று மணிமகுடம் சூடியபின்
'கன்னித் தமிழ்நாட்டில் கார்ரைக் குடிசாரும்

நாட்டரசன் கோட்டை நமக்'கென்று எழுந்தருளும்
பாட்டரசன் என்றுலகம் பாராட்டும் கம்பனைநான்

செவ்வி அறிந்து சிறப்பாகப் போற்றுதற்கு
எவ்வகையும் இல்லேன், எனினும் கவிகம்பன்

பொன்னார் திருவடியில் பூவோடு மட்டுமன்றிச்
சென்னி தனையுமுடன் சேர்த்துத் தினம்வணங்க

வாயால் மனத்தால் வழுத்திடுவேன் என்றென்றும்!
தாயாம் அவனே சரண்!

## அவையோர்க்கு நல்வரவு

இந்தியநாட் டிலங்குமொழி எல்லாம் போற்ற
ஈடில்லா அரியணையில் வீற்றி ருக்கும்
சந்ததமும் கன்னிஎன்ற தன்மை மாறாத்
தமிழன்னை நோற்றமைந்தன் தன்னேர் இல்லான்
எந்தைபிரான் கம்பனுடைத் திருநாள் தன்னில்
இனித்தசுவைத் தமிழ்பருக ஈண்டி இங்கே
வந்திருக்கும் யாவரையும் 'வருக!' என்று
மனமார வரவேற்பேன் வணக்கம் கூறி.

சிந்தைஎலாம் அன்பரும்ப, செய்கைஎலாம்
அறம்மலர, சிலம் ஓங்க
சந்ததமும் உதவுதனிக் காப்பியமாம்
இராமாவ தாரம் தந்த

எந்தைபிரான் கம்பனவன் எவர்அருளால்
மாகவிஞன் என்ன ஆனான்
அந்த உயர் முந்தையரை அகம்மகிழப்
போற்றிடுவான் அரங்கம் ஏறி.

அன்றுதிரு மாலெடுத்த அவதாரம்
பத்தென்றால், அவனைப் பாடும்
தென்றலெனக் கொண்டல்எனச் செந்தமிழின்
இமயம்எனத் திகழும் கம்பன்
நன்றிநிறை திருமனத்தால், நளிர்வாக்கால்,
முன்னையர்தம் நலம்பா ராட்ட
இன்றெடுத்த அவதாரம் ஈராறாய்
இலங்குவதை இங்குக் காண்போம்:

மின்னொளிரும் உதயகிரி மீப்படரும்
செங்கதிரோன் வேறு வேறாய்ப்
பன்னிரண்டு பேராகிப் பார்புரக்கும்
பான்மையதைப் பற்றிக் கொண்டு
என்னுடையன் கம்பனவன் எண்ணரிய
துறையறிவை ஈந்து வந்த
முன்னையவர் உதவிஎலாம் முழுதுநினைந்
தவர்ப்போற்றும் முறையைக் காண்போம்.

மன்னுமுப நிடமுனிவர், வண்தமிழ்தேர்
அகத்தியன், வான் மீகி, அவ்வை,
பன்னரிய புகழ்க்கபில பரணரொடு
நக்கீரன், மருதன், பாரோர்
உன்னுவள்ளு வன், இளங்கோ, கொங்குவேள்,
காரையம்மை, உயராழ் வார்கள்,
முன்னர்எமு திருமுறைசெய் மூவரையும்
புகழ்கம்பன் முறைமை கேட்போம்.

## 1. உபநிடத முனிவர்

அருட்டிருவார் உபநிடதம் அருள்முனிவர்
தமைப்போற்றி அஞ்ச லிக்க,
பொருட்டொடராம் நிலைச்செய்யுள் புலவரெலாம்
வியக்கஅருள் புகழார் கம்ப!

திருச்சிநகர் வளர்புலவன், செந்தமிழும்
ஆரியமும் செழிக்கக் கற்றோன்
கிருட்டிணசா மிப்பெரியோன் கிளர்உருவில்
எழுந்தருள்க கிழமை யோடே!

## 2. அகத்தியர்

என்றுமுள தமிழ்செழிக்க இலக்கணம்செய்
அகத்தியனார் என்னும் தேவை
நன்றியுடன் போற்றிசெய, நங்கள்குலத்
தெய்வமென நின்ற கம்ப!
தென்தமிழின் ஆசான்,நின் சேவடிசேர்
திருமனத்தால், செம்ம லாகி
நின்றகம்ப ராமனுருக் கொண்டிங்கே
எழுந்தருள்க, நேய மோடே!

## 3. வான்மீகி

வாங்கரிய அடிநான்கில் வானமுதாய்
முதல்நூலை வடித்துத் தந்த
ஓங்குபுகழ் வான்மீகி உயர்பெருமை
நன்றியுடன் உரைத்துப் போற்ற,
ஈங்கெமது தலைநிமிர இராமகதை
திருத்தியருள் எந்தை கம்ப!
தீங்கறுநல் அன்புடையான் ஜனார்த்தனன்தன்
திருவுருவில் திகழ்ந்து வாராய்!

## 4. அவ்வையார்

அவ்வைஎனத் தமிழுலகில் அருள்சுரந்தார்
பற்பலரால்; அவருள் முன்னர்த்
திவ்வியநற் சங்கமதில் திகழவ்வை
தனைப்போற்றிச் சிறப்புச் செய்ய
ஒவ்வுமுறை செவிநுகரும் உயர்கவிதைக்
கொருகவியாய் ஓங்கு கம்ப!
செவ்விநிறை மனத்தரங்க சீனிவாசன்
உருவமதைச் செழிக்கக் கொள்ளே!

## 5. கபில - பரணர்

சொல்லரிய புகழ்க்கபிலர் தூயமனப்
பரணர்தமைத் துதித்துப் போற்ற
வெல்லமென, அமுதமென, மிகஇனிக்க
இராமகதை விளம்பு கம்ப!
எல்லையிலா அன்புடையான் எழில்முத்துக்
கணேசனுரு எடுத்துக் கொண்டே
ஒல்லையிவண் எழுந்தருளி உயர்தவிசை
அணிசெய்க உவகை யோடே.

## 6. கீர - மருதர்

நெஞ்சஞ்சாக் கீரனையும் நிமிர்புலமை
மருதனையும் நினைந்து போற்ற,
செஞ்செவியார் தீங்கவியால் சீராம
காதையருள் தெய்வக் கம்ப!
கொஞ்சுதமிழ் ஆய்ந்துபயன் கொழிக்குதமிழ்
அண்ணலுருக் கொண்டி வண்நீ
எஞ்சாத நல்லன்பால் எழுந்தருள
வேண்டுகிறேன் இருதாள் ஏத்தி.

## 7. வள்ளுவர்

உலகுதலைக் கொளும்அறத்தை உதவுதிரு
வள்ளுவனை உவந்து போற்ற,
பலகலையும் கற்றுயர்ந்த பருணிதனே!
பவித்திரமே பகரும் கம்ப!
திலகமொழித் தமிழ்பயிற்றும் சிங்கார
வேலனுருச் சிறக்கத் தாங்கி,
பொலபொலெனக் கவிமாரி பொழியவர
வேண்டுகிறேன் போற்றி செய்தே.

## 8. இளங்கோ

முந்துதமிழ்க் காப்பியத்தை முளைக்கச்செய்
இளங்கோவாம் முனிவற் போற்ற,
சந்ததமும் நறைகுறையாத் தமிழ்ராம
காதையருள் நலமார் கம்ப!

செந்தமிழ்தேர் நல்லாசான் திருஅப்துல்
ரகுமான்மெய் சேரத் தங்கி
இந்தவுயர் கவியரங்கம் ஏறிவர
வேண்டுகிறேன் இருகை கூப்பி.

## 9. கொங்குவேள்

மங்கைநகர் தனிற்பிறந்து மனங்கவரும்
மாக்கதையை வடித்துத் தந்த
கொங்குவேள் தனைப்போற்ற, குவயலத்துள்
உயர்கவிஞர் கூட்டத் துள்ளோர்
சிங்கமெனத் திகழ்கம்ப! திருப்பனந்தாள்
தருபுலவன், செம்மை யுள்ளம்
தங்கமெனும் பசுபதிதன் உருவேற்று
வந்தருள்க தயவு கூர்ந்தே!

## 10. காரைக்காலம்மை

அப்பனவ னே'அம்மை' எனஅழைத்த
காரைக்கால் அம்மை தன்னைத்
திப்பியமாய்ப் போற்றிசெயச் செந்தமிழ்த்தாய்
செய்தவத்தால் செனித்த கம்ப!
துப்புநிறை சித்தன்எனத் துலங்குமுரு
நீஎடுத்துத் துரிசில் லாத
இப்புனிதக் கவியரங்கில் எழுந்தருளிப்
பயன்சுரக்க இசைதல் வேண்டும்!

## 11. ஆழ்வார்கள்

தேன்அளைந்து, பால்அளைந்து, தீந்தமிழாம்
அமுதளைந்து, தெய்வம் சேர்த்து
வானவரும் காணாத மாண்பொருளைப்
பாசுரமாய் வடித்துக் காட்டிப்
போனதமிழ் ஆழ்வார்கள் போற்றிசெயத்
திருமால்சீர் புகலும் கம்ப!
மானவனும் தேசிகன்தன் வடிவெடுத்து
வரவேண்டி வணங்கு கின்றேன்!

## 12. மூவர் முதலிகள்

கடையூழி வருந்தனிமை கழிப்பதற்கே
தமிழ்மொழியின் கவிதை ஏட்டை
இடைசெருகி இருந்தபிரான் எழில்பாடும்
மூவர்புகழ் ஏத்திப் போற்றி
மடமடெனக் கவிபொழியக் கவிச்சக்ர
வர்த்திஎன வந்த கம்ப!
கடர்மதுரைச் சொ.சொ.மீ. தூவுருவில்
எழுந்தருளத் தொழுகின் றேனுன்!

### தலைமை

பன்னிருவர் உருவெடுத்துப் பண்டையர்கள்
செய்ந்நன்றி பரிந்து போற்ற,
என்னுடையன் கம்பனவன் எழுந்தருளின்
தலைமைகொள எவரே தக்கார்?
அன்னவரார்? சிந்தித்தேன்; அப்பொழுதென்
முன்நின்ருய், அடியேன் காண;
பொன்னிவளம் சுரந்தருளும் வெண்ணெய்மன்
சடையனெனப் புகழ்பெற்றேயே!

அத்தனையும் எனையாளும கம்பனருள்
எனநம்பி ஆர்வம் தூண்ட
சத்தான குணமுடைய சடையப்ப
வள்ளல்நற் றமிழ்ம ணக்கும்
வித்தார மணிமாடம் எனவிளங்கும்
நின்மனைக்கே விரைந்து வந்தேன்
எத்தாலும் மறுக்காமல் கவியரங்கத்
தலைமைகொள இசைதல் வேண்டும்!

என்றுனது தாள்வணங்கி இரந்தேற்குப்
பரிந்துமனம் இரங்கி அன்பால்
'நன்று!உனது விருப்பதனை நாம்நிறைவு
செய்கின்றேம் நம்பு வாய்'என்(று)
அன்றுரைத்த படியிங்கே அருள்சுரக்க
வந்தருளும் அருமை ஐய!
இன்றிந்தக் கவியரங்கின் எழிற்றலைமை
பூண்டுபொலி வெய்தச் செய்வாய்!

வந்தசகம் எண்ணூற்றேழ் வளர்வெண்ணெய்
நிறைபுலவர் வாழ்த்திப் போற்ற
எந்தைபிரான் கம்பனைநீ இராமாவ
தாரமரங் கேற்ற வைத்துச்
சந்ததமும் விளங்கு 'கவிச் சக்ரவர்த்தி'
எனும்பட்டம் தரணி மீது
முந்தியடை பெருமைபெற முன்னின்ற
நினதருமை மொழியப் போமோ?

அன்பதனால், கல்வியினால், ஆன்றகுடிப்
பிறப்பதனால், அகம்ம லர்ந்தே,
இன்பவுரை பகர்ந்தென்றும் ஈத்துவக்கும்
கொடைநலத்தால், இராம காதை
தன்பெருமை சாற்றுவதால், சடையப்பா!
நீயேதான் தலைமை தாங்கி
உன்பெரிய தோழனவன் உரைமாண்ட
கீர்த்தியினை ஓதல் வேண்டும்.

ஆதலினால் கவிகம்பன் எழுந்தருளும்
சீர்த்திநிறை அரங்கம் ஏத்தக்
காதலினால் நீயின்று கலைமகளின்
ஆசானாய், கவிதை என்னும்
போதலரும் பொய்கையெனப் பொலிகி.வா.
சகந்நாதன் புனித மேனி
மீதமர்ந்து வந்தருள வேண்டுமெனக்
கைகூப்பி வேண்டு கிறேன்!

அரியபழம் புலவர்புகழ் அலர்இனிய
கவியரங்கம் அழகு பூக்கப்
பெரியபுகழ்ச் சடையவள்ளல்! பிறங்குசகந்
நாதனுருப் பெற்றுக் கொண்டு
விரியுமலர்க் குடைநீழல் மேவுமயில்
ஆசனத்தே வீற்றி ருந்துன்
உரிமையுடன் கடமைபுரி உயர்கம்பன்
பணிசிறக்க உதவு வாயே!

என்னஇவன் எழுந்தருளும் எழிற்சடைய
வள்ளலையும் எங்கள் தெய்வம்
பன்னிரண்டு உருவிலருள் பாலிக்கும்
கம்பனையும் பணிந்து வேண்டி
முன்னிருக்கும் யாவரையும் முடிசாய்த்து
வணங்கிப்பின் முத்த மிழ்த்தாய்
பொன்னடியில் தலைபொருத்தி விடைகொள்வான்
கம்பனடிப் பொடியன் தானே!



# கவியரங்கம்

## தலைமை உரை

### திரு. கி. வா. ஜகந்நாதன்

(முருகன் துதி)

உருகுமன்பர் துதிசெய்கின்ற பாட்டினன்
உரையிகந்த புகழ்கொள்இன்ப வீட்டினன்
முருகனென்ற பெயர்கொள்கின்ற ஈட்டினன்
முதலுமந்த மதுமகன்ற தேட்டினன்
திருகுகின்ற எனதுசிந்தை ஏட்டினன்
செருவில்வந்த அசுரர்மந்தை ஓட்டினன்
மருவுமும்பர் பழமைஒன்ற நாட்டினன்
மனமுவந்து கவியைஎன்கண் நீட்டுவான்.

(குரு வணக்கம்)

அந்தாதி என்றும் கலம்பகம் என்றும் அடர்ந்தபிர
பந்தாதி யன்றி அறியாத் தமிழகம் பண்டுசங்கம்
வந்தேறி நின்ற புலவாணர் நூலின் மயங்கும்வணம்
தந்தான் புகழ்ச்சாமி நாதன் அடியென் தலையினவே.

(கம்பன் அடிப்பொடி)

அண்டர்தம் ஆரமு துஞ்சுவை குன்றிய தாமென வேமொழிய
எண்டிசை யும்புகழ் இராம கதைதரும் எங்கள் கவிப்பெருமான்
ஒண்டிரு நாள்நனி கண்டிணை யேதும் உரைப்பரி தாப்புரியும்
வண்டமி ழாகரன் கம்ப னடிப்பொடி வாழிய வாழியவே!

(புலவர்—அவையோர்)

பண்டைப் பனுவல் தந்தபல பாவா ணர்தம் சிறப்பியம்ப
அண்டும் புலவர் பன்னிருவர் அவரை வணங்கிக் கவித்தேனை
வண்டென் றுண்ண வந்தவையில் மலிந்த பெரியோர் தமக்கன்பு
கொண்டென் வணக்கம் இயம்பிக்கை கூப்பித் தொழுதே இறைஞ்சினனே.

(அவையடக்கம்)

கடைய னுகிக் குறுங்குடுமி காட்டி அமர்ந்த எளியேனைச்
சடைய னுக வைத்திந்தத் தலைமை நல்கிப் புலவர்தமை
நடையில் நின்ற இராமகதை நவின்ற கம்ப னுக்கிவைத்த
கொடையன் எங்க ணேசன்தன் கொள்கை சால அழகிதே.

நாட கத்தினில் வேடம் தரித்தபின்
நாணி நிற்பது சாலுமோ? ஏற்றஅவ்
வேடம் எப்படி அப்படி யேமொழி
வினைகள் செய்வது வேகடன்; ஆதலால்
சோடை யாய அறிவுச் சழக்கனேன்
சொந்த நாமம் நிலைமை மறந்தந்தப்
பாடல் சான்ற சடையனைப் போலவே
பாட்டுப் பாடப் புகுந்தனன் கேண்மினே.

(வரவேற்றல்)

செந்நெற் கதிர்கள் கவரினச் சிறுகால் வீசத் தாமரையில்
செம்மாந் தன்னம் வீற்றிருக்கும் செல்வச் சோழ வளநாடா!
கன்னற் காடு சூழ்ந்துவளம் காட்டும் எழில்சேர் தேரழுந்தூர்
காலம் தேய்த்துப் புகழ்கொள்ளக் கதிரோ னென்ன உதித்தவனே!
மன்னும் கார ணக்கொடையார் வமிசம் செய்த தவப்பயனே!
மைந்தா! யான்கண் டெடுத்ததனி மணியே! கவிஞர் பெருமணியே!
பொன்னும் மணியும் கொழித்துவரு பொன்னி யாற்றின் பெருக்கேபோல்
பொழியும் கவிசொல் திருவாயோய்! புனிதக் கம்பா! வருகவே! 1

புற்றில் வாழ்ந்த வான்மிகி புகன்ற இராம கதையென்னும்
பொன்னைப் புதிய கற்பனைகள் புகுத்தி மெருகிட் டணியாக்கி,
முற்றும் முழுவாழ் வினைமனிதர் முயன்றே அடைய வழிகாட்டும்
முன்னோன் திருவள் ளுவன்தந்த முதுநூ லுக்கோர் உரையென்னக்
கற்ருர் மதிக்கச் செந்தமிழால் கவினுர் காப்பி யந்தந்த
கம்பா வருக! கவியுலகின் கதிரே வருக! ஒப்பாக
மற்ருர் தமையும் உரைப்பரிய மணியே வருக, தமிழ்த்தாயின்
மதிப்பை உயர்த்தி வாழ்வித்த மதலாய் வருக வருகவே! 2

தண்ணந் தமிழ்ப்பண் பினைமறவாத் தகைமை யாள! மிதிலைநகர்ச்
சாலை வழியே முனிவனொடும் சாரும் இளவ லொடும்சென்ற
அண்ணல், சீதை யினைநோக்க அவளும் அவனை நோக்கினளென்று
அமைந்த களவு மணமரபை அழகாய் நுட்ப மாஇணைத்த

வண்ணக் கவிஞ! இராகவனை வானத் துறைமும் மூர்த்திகள்ஓர்
வடிவா வந்தான் என்றகவி மன்ன! வருக வருகவே!
நண்ணும் ஆற்றின் வருணனையில், நான விதமாம் சமயத்தின்
நாட்டம் ஒன்றே எனஉணர்த்தும் நம்பா! வருக வருகவே! 3

சீலம் இழந்த இராவணன்அச் சீதா தேவி திருமேனி
தீண்டா னகித் தரையோடும் சிறிய குடிலி னேடும்எடுத்
தோலம் இட்வே சென்றுன்என் றுரைத்த திருவாக் குடையோனே!
ஓங்கும் கிட்கிந் தைக்கண்ணே உற்ற வாலி இறந்தபின்னர்ச்
சாலும் அவன்றன் மனைதாரை தழைத்த தொருமங் கலம்இழந்து
தாங்கும் கைம்மைக் கோலத்தில் சாரக் கண்ட இலக்குவன்தன்
நூலை இழந்த தாய்தமை நுனித்து நின்று நைந்ததனை
நுவன்ற பெருநா வலவருக! நுண்மாண் புலத்தோய் வருகவே! 4

சேறு மணந்த நிலமெல்லாம் செந்நெ லாக வளங்கொழிக்கும்
திறமே போல என்பால்நீ சேர்ந்து வளர நான்ஊட்டும்
சோறு மணந்த வாயெல்லாம் சுவைசேர் கவியாப் பொழிந்தவனே!
சொல்லில் உணர்வைச் சிறைசெய்து சொக்க வைக்கும் கவிவருக !
நீறு மணந்த திருநுதலோய்! நேயம் மணந்த திருவுளத்தோய்!
நித்த நித்தம் புலவர்கள் நிகழ்த்த நின்ற பெரும்புகழோய்!
சாறு மணந்த கரும்பனைய தமிழைத் தந்தாய்! நன்றியினில்
தன்னே ராரும் இல்லாத சான்ருேய்! வருக வருகவே! 5

என்றன் மகன்போல் என்சொல்லை ஏற்று நடந்த சேய்வருக!
என்நட் பாளன் எனஇனிய இசைத்து நலஞ்செய் தோய்வருக!
என்றும் தேயாப் பெரும்புகழை எனக்கீந் திடுவள் ளல்வருக!
என்பேர் மாயா வகைகவியில் இணைத்த சிற்பி யேவருக!
நன்றி மறவா நாயகமே! ஞானச் சுடரே! தமிழ்ச்செல்வா!
நண்ணும் கலைகள் யாவையுமே நன்ருய் அறிந்தாய் வருகவே!
தொன்று தொட்டு வளர்ந்ததமிழ் சுடர்விட் டோங்கச் செயும்ஒளியே?
சொல்லின் செல்வா! கவிஞர்களில் துரையே! வருக வருகவே! 6

(பாராட்டு)

நெல்லின் சுவையறிந்து நின்றஎனைச் செய்யதமிழ்ச்
சொல்லின் சுவையறிந்து சொக்கவைத்தாய் நீயன்றே! 7
கரும்பின் பதமறிந்து கண்டுசெய்த என்உளத்தே
விரும்பும் தமிழ்ப்பதத்தின் வேட்கைஎழு வித்தனையே. 8

நன்செய் நிலம்விளைய நாற்றுநடு வேன்பேரைப்
பொன்செய்தமிழ்க் காப்பியமாம் பூஞ்சோலை நட்டனையே. 9

காவிரியின் நீர்வளத்தைக் கண்டஎன்றன் நெஞ்சினிலே
பாவிரியும் சீர்வளத்தைப் பாயும்வகை செய்தனையே. 10

ஆயிரத்துள் நாளுெருவ ளுமென் றுலகுரைக்க
நீயிணைத்தாய் என்பேரை நின்அருமைக் காப்பியத்தே. 11

கம்பனென்றுன் சீர்பாடும் காலையெலாம் என்பெயரும்
அம்புவியிற் சான்ருேர் அறையும்வகை வைத்தனையே. 12

என்பேரைச் சொல்வதனுக் கில்லைமைந்தன் என்றயரேன்;
நின்போலப் பிள்ளை நிலத்துதித்தார்க் குள்உளரோ? 13

முடிபுனைந்த பாட்டில் மொழிந்திலைநீ இராமன்பேர்;
பொடிபுனைந்த என்பேரைப் பொன்ருமல் வைத்தனையே. 14

வாழி இராகவற்கு மாமுடியைச் சூட்டியதோ?
ஏழையேற் கன்ருே எழில்முடியைச் சூட்டினையே. 15

சிங்கா தனத்தில் சிறையிருந்த செல்வியுடன்
மங்காநின் நன்றி அறிவும் மலர்ந்ததுவே. 16

என்னைநீ பாடி இறவாமற் செய்துவிட்டாய்;
உன்னைநான் பாட ஒருசெவ்வி வாய்த்ததின்றே. 17

சங்கத்துச் சான்ருேரைச் சற்றும் அறியாதேன்
சிங்கம்நினைக் கண்டின்பம் சேர்ந்திருந்தேன்; போதாதோ? 18

வள்ளுவனைக் காணு வறுமையேன் என்றுரையேன்;
துள்ளும்உனைக் கண்டு சுகமடைந்தேன்; போதாதோ? 19

ஆழ்வாரைக் கண்டிறைஞ்சேன் ஆனுலும் நின்வாக்கில்
வாழ்வான பத்தி வளந்தெரிந்தேன்; சாலாதோ? 20

நீஒருவன் முன்இருந்தார் நீடுபுகழ் அத்தனையும்
ஏய கதிரவன்போல் ஏற்றெழுந்தாய் என்பேனே. 21

பின்வந்தார் நின்கவியைப் பேணி அறிந்துயர்ந்து
முன்வந்தார் என்று மொழிந்தால் அதுபொய்யோ? 22

வேறு

குட்டை குழப்பிக் கமலப்பூத் தின்று குதப்புகின்ற
மொட்டை எருமைகள் மோதும் செருவன்றி முற்றியபோர்
இட்டமெய் வீரர் தமையறி யாதநீ எவ்வணம்அச்
சிட்டன் இராகவன் செய்வீரப் போர்க்காட்சி செப்பினையே! 23

எங்கும் புனல்நிறை செந்நெற் புலத்தை இனிதறிவாய்;
பொங்கும் திணையைந்தும் அற்புத மாகப் புகல்வதனுக்
கெங்குநீ கற்றனை? இவ்வுல கோமற்றவ் வேழுலகும்
தங்கியே வாழ்ந்தவன் போல வருணனை சாற்றினையே! 24

உன்னுடை உள்ளம் அயோத்தியோ? அங்கே உயர்கருணை
மன்னன் இராமன் ஒருமுறை மீண்டும் வருகைதந்து
தன்னுடை ஆடல்கள் யாவையும் காட்டித் தழைத்தனனோ?
முன்னவர் சொல்லாத பற்பல காட்சி மொழிந்தனையே! 25

கம்பைக் கரங்கொண்டு நின்றனை அந்நாள்;உன் காப்பியத்தில்
பம்பும் கதைச்சுவை பார்த்திடின் நீஅந்தப் பாற்கடல்விட்
டிம்பர் அரக்கரைக் கொல்வதற் காக எழுந்தருளும்
நம்பன், சிலைகொண்ட ராமன்கொல் என்றெண்ணம் நண்ணுறுமே. 26

சீதையின் உள்ளத்தை எவ்வாறு கண்டாய்? திருவடியென்று
ஓதும் அநுமன் அறிவினைப் பண்பினை ஓங்குதொண்டுக்
காதலை எங்ஙன் அறிந்தாய்? இராவணன் காமத்தினை
நீதியில் லாத உளத்தைஎங் ஙன்காண நேர்ந்ததுவே. 27

கச்சித மாகப் படைத்தனை பாத்திரம்; காணுமவை
உச்சித மாங்கம்ப நாதம் ஒலிக்க ஒளிருவன;
விச்சையில் வல்லவர் மண்ணினைப் பொன்னென வேதித்தல்போல்
வச்சநின் சொற்களெல் லாமந் திரமாய் வயங்கினவே. 28

வண்டுமு ரன்றுது தைந்தும ணந்தொளிர்
பங்கய மொன்றி அணைந்தபெண் வண்டொடு
மண்டி முகந்து மகிழ்ந்து நுகர்ந்திடு மதுதானோ?
விண்டலம் உம்பர் விழைந்து நலம்பெறும்
ஒண்கடல் சந்திர தம்பம் இணைந்துற
விஞ்சி உரங்கொடு நின்று கடைந்தநல் அமுதேயோ?
தண்டலை எங்கும் உழன்று சுழன்றுயர்
சந்தன அந்தரு வின்கண் இயைந்தலர்
தங்கிய கந்தம்அ ளைந்து பரந்துறு வளியேயோ?
எண்டிசை யுஞ்சுவை கண்டிடும் நின்கவி
இன்பம தென்சொல? இந்தவி ருந்தினை
இம்பர் வழங்கின கம்பநின் இன்புகழ் நனிவாழி!

முன்னோர் பனுவல்கள் முற்றும் அறிந்தனைநீ;
அன்னோர் சொலாத அவைசொன்னாய்;—பின்னோர்கள்
காப்பியத்தைச் செய்யும்வகை கற்பித்தாய், செந்தமிழின்
யாப்பணிகள் காட்டி இனிது. 30

சான்றோர் கவிபோலச் சார்ந்ததுகோ தாவிரியென்
றூன்ற உவமை அறைந்தனையோ;—ஏன்றமலர்க்
கற்பகம் போல்வர் கவிஞரென்றாய்; பம்பைக்கொப்பு
அற்புதமாம் சொற்பொருளென் றாய். 31

(வேண்டுகோள்)

முந்துறும் புலவர் தங்களை மதித்து
மூண்டஅன் புடையநீ இன்று
செந்தமிழ்க் கவியால் அன்னவர் தம்மைச்
செய்ந்நன்றி யறிவொடு பாடின்
பிந்திய புலவர் நின்னெறி பற்றிப்
பேணியே முன்னவர் இயல்பைச்
சிந்தையிற் கொண்டு போற்றுவர்; அதனால்
திருவுறப் பாடுக இனிதே! 32



# 1. உபநிடத முனிவர்

திரு. அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார்

காப்பு

உலகம் யாவையும் தாமுள வாக்கலும்,
நிலைபெ றுத்தலும், நீக்கலும், நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர்; அன்னவர்க் கேசரண் நாங்களே.

* * *

மன்னன் நல்ஆ · தித்தனையும்
மாண்பார் வெண்ணெய்ச் சடையனையும்
கன்னித் தமிழில் கனிவான
கவிதை உளத்தால் போற்றுகிறேன். 1

அண்ணல் இராமன் திருக்கதையை
அவனிக் களித்த வான்மீகி—
கண்ணில் இராமன் கழல்கண்ட
கவிஞன்—தனக்கென் கைகூப்பு. 2

கன்னித் தமிழில் இராமனையான்
கவிதைச் சிகரத் தேற்றிடினும்,
என்னின் இனிதாய் இசைத்திடுவார்
இருப்பர் என்றே நம்புகிறேன்! 3

மண்ணில் இராம கதைபேசும்
மன்றம் தேடி, அதைச்சுவைக்க
நண்ணும் வீரன் அனுமனைப்போல்,
நானும் சென்று களிக்கின்றேன். 4

காருத் தன்சீர் தனைக்கேட்கக்
காரைக் குடிக்கில் வடியேனும்
ஏகி, முப்பத் தைந்தாண்டாய்
இன்சொல் அமுதம் பருகுகிறேன். 5

அடியென் புகழை, அனைவருமே
அரங்கம் ஏறி முழக்கிடினும்,
பிடியில் சிக்கிக் கொள்ளாமல்
பின்னார் இடத்தில் மறைந்திருப்பேன். 6

வந்த சுவடு தெரியாமல்
வல்லை மறைந்து செல்வேனை,
எந்த விதமோ, இவ்வாண்டில்
இழுத்து வந்து நிறுத்திவிட்டார்! 7

கம்பன் யான்,இவ் அரங்கேறிக்
கவிதை பாடிக் களித்திடவே,
நம்பத் தகுந்த காரணத்தை
நன்மன் றறிய நவில்கின்றேன். 8

என்னை வளர்த்த சடையப்பன்,
இந்நாள், என்றன் அடிப்பொடிஎன்(று)
அன்னை போல எனைப்பேணி,
அகிலம் வணங்கச் செய்திட்டான். 9

நன்று தமிழின் புகழ்பாடி
நாளும் என்னை வளர்க்கின்றான்.
அன்று வளர்த்த சடையன்போல்,
அண்ணல் கணேசன் அமைந்திட்டான். 10

கோடி மக்கள் கைகூப்பும்
குணக்குன் றான கணேசனை,யான்
நாடிக் கண்டு கொண்டமையால்,
நாவில் கவிதை மலர்ந்ததுவே! 11

முடிமன் னரையான் மதித்ததில்லை;
முடிதாழ்த் திறைஞ்சித் துதித்ததில்லை.
அடியென் என்றன் அடிப்பொடியாம்
அன்பன் கணேசன் தனைப்புகழ்வேன். 12

மன்றில் என்றன் கவிச்சுவையை
மாந்த வந்த சான்றோரே!
நன்றிச் சுருக்கில் உமைமாட்டி,
நான்என் பணியைத் தொடர்கின்றேன். 13

செவியில் பரம புருடன்றன்
சீரைக் கேட்டோம்; ஆனால்இப்
புவியில் கண்ணால் பரம்பொருளைப்
போற்றிக் கண்ட துபநிடதம். 14

ஞானம் நிறைக்கும் உபநிடதம்,
நாட்டுக் களித்த சான்றோர்தம்
தேனின் இனிய திறம்பாடச்
செய்த தவத்தைப் போற்றுகிறேன். 15

வேறு

ஓம்என்னும் சொல்லினிலே உலக டக்கி,
உலகத்தின் உயிரெல்லாம் அதில டக்கி,
ஆம்அதனுள் இருந்தியக்கும் தத்து வத்தை
அறிந்துரைத்தார், உபநிடதத்(து) அறிஞர் அம்மா! 16

பூமியிலே மாமுனிவர் புகன்ற வாக்கு,
புகழ்மிக்க உபநிடதம் ஆகும் என்பார்.
யாமளந்தம் மாமுனிவர் பெருமை கூறல்,
இரவிதனைச் சங்கிலியால் அளப்ப(து) ஒக்கும். 17

ஆல்என்னும் வேதமரம் கிளைத்த சாகை,
அரியபிரா மணமொடுசங் கிதைகள் ஆகும்.
மால்என்னும் அகங்காரச் சருகை வேள்வி
வன்னியிலே பொசுக்கவகை அவைதாம் கூறும். 18

சூல்கொண்ட உபநிடத மந்தி ரங்கள்,
சுடர்கொண்ட கிதைமுதல் சாத்தி ரங்கள்,
வேல்ஒத்த ஞானப்ர மாண மாகி,
வேதாந்த மரத்தினது வேராய் நிற்கும். 19

அருள்வாக்காம் உபநிடத முனிவர் நோக்கு,
அதுஞான மகுடமென உலகில் நீடும்;

பெருகிவரும் உபநிடத ஞான கங்கை,
பேசரிய தத்துவமெய்ஞ் ஞான வெள்ளம். 20

குருவுடனே சீடன்,பல் லாண்டுக் காலம்
குறிப்பறிந்து கேட்டுணர்வால் அனுப வித்துப்
பொருளறிந்து, மூலத்தைச் சார்ந்து, தேர்ந்து
புகல்வதுசம் பூதி-அசம் பூதி ஆகும். 21

பிறவியிலே பிறவாத பொருளி ரண்டும்
பிணைந்திணைந்து தோன்றுவதிவ் உடலம் ஆகும்.
பிறவிபெறு வான்மனிதன்; பிறவான் ஈசன்;
பிறவியினுள் அவன்பிரம புரம மர்ந்தான். 22

புறம்நின்று புறம்நோக்கி, அதனுக் குள்ளே
பொய்யான பிறவிதனை உவந்து பெற்றுப்
புறம்போக்கும் சிற்றறிவின் மனிதர் நெஞ்சப்
புன்மையினை, அம்முனிவர் போக்கி னாரே. 23

வேறு

இகத்துடனே பரமென்ன ஈருலகம் எங்கோ
இருப்பதென மீயங்குகின்ற இப்புவியின் வாழ்வில்,
அகத்தினிலே பரனிருக்கும் அந்நிலையே அந்த
ஆதிபர வுலகமென உபநிடதம் கூறும். 24

பரனிருக்கும் நின்னகமே பரலோகம் ஆகும்.
பார்க்கின்ற படைப்பினுள்ளே ஊடுருவி நோக்கின்,
நரனே,நீ நாரணனை நின்னுள்ளே காண்பாய்!
நல்லபர லோகமுன்னுள் தானுள்ள தென்றார். 25

வேறு

தனியுடைமை—பொதுவுடைமை பேசிப் பேசிச்
சலிக்கின்ற மாந்தர்களுக் கிறைவன் தந்த
இனிதான அருளுடைமை அறிந்து துய்ப்பீர்!
எனஉரைக்கும் உபநிடத முனிவர் வாக்கு. 26

உடலதனில் உறைகின்ற சுத்த ஆன்மா,
உலவாத அமரநிலை உடைய தாகும்.
உடலமது சட்டையெனக் கிழிந்த போதும்,
உள்ளிருக்கும் பொருளென்றும் அழிவ தில்லை. 27

வேறு

சுடர்கின்ற உட்சோதி கண்டதனில் சேரத்
துய்யநந்தி துணையால்உண் ணுமுலையை உண்டால்,
இடரில்லை; சாவில்லை; எக்குறையு மில்லை
என்பதெலாம் உபநிடத மாமுனிவர் வாக்கு. 28

ஒருநூறெ டெட்டென்பார் உபநிடத நூல்கள்;
ஒருபத்தவ் வுபநிடதத் துயர்வுடைய வாகும்.
தருஈச, கேன,கட, மண்டுக்ய, முண்ட
தனிப்பிரச்ன, சாந்தோக்ய, பிரகதா ரண்ய, 29

தைத்திரியோ டைதரேய எனவிளங்கி நிற்கத்
திகழ்கின்ற உபநிடதம் செய்தளித்த முனிவர்,
தத்தமது பெயர்சொல்லிப் புகழ்கொண்டார் இல்லை.
தத்துவத்துக் குயிர்தந்தார்; தற்பெருமை துறந்தார். 30

உலகுய்ய மாமுனிவர் உபநிடதம் செய்தார்;
உண்மைக்கே வழிகாட்டி உளம்புகுந்து நின்றார்.
குலவுமவர் தத்துவங்கள், இராகவன்பால் கண்டேன்;
கோமகனே மூலமெனக் குறித்திறைஞ்சி நின்றேன். 31

விராதனெனும் ஒருகொடியோன் சானகியைப் பற்றி,
வினைநீங்கித் தெய்வவடி வாய்த்துதிகள் கூறிப்
பராவியதில், மூலமந்த இராகவனே என்று,
பாட்டினிலே உபநிடதத் தத்துவமே சொன்னேன். 32

''வேதங்கள் தொழநிற்கும் நின்கமலத் தாளே
வியனுலகம் அளந்ததெனில், நின்வடிவம் யாதோ?
பூதங்கள் உனைப்பொறுக்கும் வலிமையுள வேயோ?
பொருந்தாத அவைஒன்றிப் பொருந்துவதுன் அருளே! 33

பிறவியெனும் கடல்கடக்கப் பெருந்தோணி ஆனாய்;
பெம்மானே! தருமத்தின் தனிமூர்த்தி நீயே;
அறம்வளர்க்கத் தாசரதி யாய்உலகில் வந்தாய்;
அன்னைதனைக் கன்றறியா அவலநிலை என்னே!'' 34

கவந்தனவன் துதிசெய்த காகுத்தன் புகழில்
கடந்துநின்ற உபநிடதக் கருப்பொருளைப் பெய்து,
புவியினிலோர் மூலந்தான், இராகவனாய் வந்து
போந்ததெனக் கவிதையிலே போதமுறச் சொன்னேன். 35

இத்தனைக்கும் அப்பால்,அவ் விரணியனுர் கதையில்,
எழில்பிரக லாதன்தன் வாய்மொழியில் பூத்த
அத்தனையும் உபநிடதத் தத்துவமே ஆகும்;
ஆதியைக்கண் டனுபவித்த அனுபூதி ஆகும். 36

தனக்குள்ளே உலகங்கள் தந்ததனுள் நின்று,
தன்னைத்தான் தாங்குபவ னுகி,முன்பின் இலனுய்த்
தனக்கொருபேர் பூணுது. சித்தானுன் என்ற
தத்துவமும், உபநிடதம் தந்தகொடை அன்ருே? 37

மூவுலகும் முக்குணமும் முச்சுடரும் ஆகி,
மூதுலகில் யாவையுமாய், ஒருவனுமாய்ப் பலராய்த்
தேவர்களும் முனிவர்களும் தொல்மறையும் தேடித்
தெரிவரியான் ஈசன் என்ற(து) உபநிடதக் கருத்தே. 38

கண்ணெதிரே தோன்றி,இரு கண்ணில்மறைந் திருந்து,
கருதியுணர் வார்உணர்வாய்க் காட்சிதரும் பரமன்,
எண்ணிலகப் படாதவனுய் இருப்பினும்,ஓம் ஒலியுள்
இருப்பனெனச் சொன்னதுவும் உபநிடதப் பொருளே! 39

உலகங்கள் ஆக்குவதும் ஒழிப்பதும்காப் பதுவும்
ஒருவிளையாட் டாய்க்கொண்ட ஒருவனவன் தானே,
தலைவன்என யான்சொன்ன காப்பும்,உப நிடதச்
சான்ருேர்தம் கருத்தென்றே தலைதாழ்த்திச் சொல்வேன். 40

மாமுனிவர் கவிஞர்எனும் வாக்கியமும் உண்டு.
மனமலர்ந்தால் கவிமலரும்; அருள்மலரும் என்பர்.
ஆமுறையில் கம்பன்யான், உபநிடத முனிவர்
அடிபற்றி இராமகதை அமுதத்தைச் சுரந்தேன். 41

கூருத தத்துவங்கள் கூறியுள்ளேன் என்று
கொண்டாடும் சீரெல்லாம் எனக்குரிமை ஆமோ!
பேருக உபநிடதப் பெருஞானம் பூத்த
பேராளர்க்(கு) அப்பெருமை பொருந்திடுமே ஐயா! 42

அரங்கத்தில் எனைஏற்றி, 'உபநிடத முனிவர்க்
கஞ்சலிகள் செய்க' என ஆணையிட்ட வள்ளால்!
கரங்கவித்தே இவ்வரங்கிற் காசிநல்கிக் களித்துக்
கம்பன்யான் விடைபெற்றேன்; உபநிடதம் வாழும். 43

# 2. அகத்தியர்

## "கம்பராமன்"

### காப்பு

உன்னை உள்ள படியறியோம்;
உலகை உள்ள திறமுள்ளோம்;
பின்னை அறியோம்; முன்னறியோம்;
இடையும் அறியோம்; பிறழாமல்;
நின்னை வணங்கி, நீவகுத்த
நெறியில் நிற்கும் அதுஅல்லால்
என்னை அடியோம் செயற்பால?
இன்ப துன்பம் இல்லானே!

* * *

மங்கலங்கள் வழங்குகின்ற தமிழ்நாடு
காதலொடு மகிழ்ந்து நோற்ற
துங்கமுறு தவப்பயனே! ஞாலமெனும்
கோவிலின்கண் தூய்மை மிக்குப்
பொங்குகலைப் பிறப்பிடமாம் இயற்கையொளிர்
பொதியமெனும் பொருவில் பீடம்
தங்குபெருந் தனிச்சுடரே! குறுமுனியே!
நின்கொற்றம் தழைத்து வாழ்க! 1

வண்டினங்கள் மோகனமாம் பண்பாடக்
குயிலினங்கள் மருவி வாழ்த்த
மண்டுபயிர் தலைசாய்க்கப் பொன்னிநதி
நடைகாட்டி மகிழ்சோ ணாட்டில்
எண்டிசையும் புகழ்அழுந்தூர் தனிற்பிறந்தேன்
சடையப்பன் எனையா ளாக்கித்
தண்டமிழை வடமொழியைப் படிப்பித்தான்;
பரம்பொருளின் தன்மை யோர்ந்தேன். 2

தெள்ளுபுகழ்ச் சடையப்பன், வெள்ளைநிறத்
தாமரையிற் சிறக்க வைகும்
கிள்ளையினை யென்னுடைய நாவகத்திற்
குடியேற்றிக் கேண்மை யோடு
கள்ளவிழ்செந் தாமரைவாழ் குலமயிலை
என்னுடைய கலைசேர் வீட்டில்
உள்ளுவந்து வீற்றிருக்கச் செய்திட்டான்:
அவனொப்பான் உலகி லுண்டோ? 3

விஞ்சுபுகழ்ச் சடையப்பன், மூவேந்தர்
தமக்கினிய விருந்து நல்கி
எஞ்சலிலாப் புகழ்பெற்ற காலத்தில்
உடனிருந்தேன்; ஏற்றம் கண்டேன்;
வஞ்சமிலா வள்ளலவன் எனையவர்பால்
மிகவுயர்த்தி மாண்பு பேசிக்
குஞ்சரநேர் பெருமிதத்தை எனக்களித்தான்;
முத்தமிழிற் குளிக்க லானேன். 4

மும்மன்னர் வியந்திட்டார்; அவ்வியப்புப்
புகழாக முகிழ்க்க வேண்டிச்
செம்மையுடன் கவிபுனையும் பேராற்றல்
செழித்தோங்கிச் சிறக்க வேண்டிப்
பொய்ம்மைதவிர் கலைநலங்கள் பெறவேண்டித்
தமிழகத்திற் புலவர் பக்கல்
அம்மியுயர் நூல்பெற்றேன் குன்றமெனச்
சடையப்ப னருளி னாலே. 5

குற்றாலத் தவமுனியே! முடிப்பவிழ
முத்தாரங் குலைந்து சிந்தி
உற்றார்போல், நீபுனைந்த அகத்தியத்து
நூற்பாக்கள் ஒளிவி ளக்காய்க்
கற்றோர்தம் உளந்தோறும் கிடப்பதனை
ஆங்காங்கே கனிந்து கேட்டேன்.
முற்றாத தமிழகத்தின் அறியாமை
மிகப்பெரிது! மூடர்! மூடர்! 6

முனிவரனே! தமிழ்நாட்டில் மெய்ப்பொருளை
யறிகின்ற முயற்சி யின்றிக்

கனியிருப்பக் காய்கவர்வார்; காயிருப்பப்
பூகவர்வார்; கவலை யில்லார்;
நனியுயர்ந்த நூல்விடுத்துப் புன்னூலைச்
சிலநாள்கள் நயந்து போற்றிப்
புனிதமுறு முள்ளத்திற் பேயாவார்;
இவர்தீமை புகலப் போமோ! 7

வேறு

நந்திய செந்தமிழ் முந்து தழைத்திடு நாவாளா!
நாவல! பாவல! காவல! நின்றமிழ் நையாமல்
விந்தை மிகுந்தமிழ் நாட்டில் வழங்கிடு வீறுற்றால்
மேதினி யிற்றமிழ் சால வுயர்ந்து விளக்காகி
வந்த மொழிக்கு ளுயர்ந்து நிறைந்து வளங்காணும்;
மாசறு பல்கலை தேருறும் இந்நிலை எய்தாதோ?
சிந்தனை யேயிலை; மூடர்கள் நாளும் செழிக்கின்றார்;
தெய்வத மே!தமிழ் உய்நெறி காட்டுக சீர்தந்தே! 8

வேறு

சங்க மாகிய பொற்புறு தொட்டிலில்
தகவு மிக்க தமிழை வளர்த்தனை!
மங்க லங்கள் பெருக்கினை: பாணினி
மாழ்கும் வண்ணம் இலக்கணம் செய்தனை!
துங்க மாகிய நின்னுளப் பாங்கினைத்
தூய வள்ளுவன் பேணினன்; நேயமாய்க்
கங்கை தங்கும் குடமென என்னருட்
காப்பி யத்தினி லுன்னெறி பற்றினேன். 9

உழக்கு நான்மறை யாவையும் நோக்கினை;
உலக மாந்தர் பலபடி பேசிடும்
வழக்கு நோக்கினை; முன்னைய பாவலர்
மாண்பி னேதும் இலக்கியம் நோக்கினை;
தழற்குட் பெய்து கனகத் திரளினைத்
தகவு ருக்கிப் பணிபுரி வாரென
இழுக்க கன்ற இலக்கணம் நல்கினை;
எந்தை யே!நினை நான்மறந் துய்வனோ? 10

குற்ற மற்ற திணைகள் வகுத்தனை;
கோத கன்றஐம் பால்கள் வகுத்தனை;

முற்றும் காட்டும் இடங்கள் வகுத்தனை;
முறையி னெண்ணும் விளங்க வகுத்தனை;
செற்ற முற்றவர் கூட வுளத்தினிற்
செம்மை யானநின் பாங்கை வியப்பரால்!
பெற்ற மூர்பவன் நல்கும் பசுந்தமிழ்
பீடு பெற்றது நின்னுள மாட்சியால்! 11

கரும்பு டைத்துநற் சாற்றைப் பிழிந்ததைக்
கமழக் காய்ச்சி அமுதமும் நாணுற
விரும்பி யேலம் முதலிய பல்பொருள்
மேவச் சேர்த்துயர் வெல்லந் தருதல்போல்
பெரும்பு விக்கண்வாழ் மக்கள் வழக்கினைப்
பேணிச் செந்தமிழ் வாணர் கவிதையில்
அரும்பும் பாங்கினை நோக்கினை; தேவரும்
ஆசை கொள்ளும் 'அகத்தியம்' ஈந்தனை! 12

வேறு

என்றுமுள மாந்தருள மேந்துநினை வெல்லாம்
ஈண்டுலகு நன்குணர, வாய்ந்தகலை யோங்க,
மன்றிடைவ ழங்களவி தாயினிய பண்பு
வாய்ந்தமொழி தீந்தமிழெ னப்பிறர் மதிக்க
வென்றிதரு சொற்கடலை நண்பினொடு நல்கி
வித்தகர் மதிக்கவுயர் நித்தியம ளித்தாய்!
குன்றனைய நின்றனருள் ஒன்றியத னாலே
கொஞ்சுதமிழ் விஞ்சுபுகழ் கொண்டது மகிழ்ந்தே! 13

வேறு

மறையினை யுணர்ந்து நுண்பொருள் கண்ட
மாதவ! நின்கரங் கொண்ட
குறைவறு தெய்வக் கமண்டலம் தந்த
கோதிலாக் காவிரி யன்பில்
நறைகமழ் சோலை நிறைதமிழ் நாடு
நானிலப் பசியினைப் போக்கி
நிறைநலம் நல்கும்; என்னில்நின் சீரை
நிலத்திடை மதிக்கயார் வல்லார்? 14

கங்கையிற் சிறக்கும் பொன்னியை விடுத்துக்
கனிவுறு நிலவளங் கண்டாய்!

மங்கலஞ் சான்ற நல்லிசைத் திறனுல்
மாண்புறு கலைநலங் கண்டாய்!
துங்கமார் சித்த நெறியினை வழங்கித்
துகளிலா வுடல்நலங் கண்டாய்!
சங்கரன் அனைய முனிவ!நின் பெருமை
தகவுறக் கண்டவர் எவரே? 15

முனிவரர் உள்ளக் குகையினில் தோன்றி
முப்பெரும் புவனத்து ளுயர்ந்த
தனிநலஞ் சான்ற மாமறை தேடிச்
'சார்ந்திலேன் சார்ந்திலேன் அந்தப்
புனிதன திருக்கை' எனவியந் தோதும்
பூரணன் நின்குடில் எய்தி
நனிமகிழ் வுற்ருன் என்னின்நின் சிறப்பை
நானிலத் தெவரளந் தறிவார்? 16

செந்திரு மணாளன் உந்தியிற் ருேன்றிச்
செகமெலாம் படைத்திடும் தேவன்
அந்தியும் பகலும் தனிமறை யோதி
யளந்திடற் கரியதோர் பிரமம்
சிந்தையு ளுவந்து நின்மருங் கெய்தித்
தெய்வத முனிவ!நின் பாதம்
வந்தனை செய்யப் பெற்றநின் சிறப்பை
மாநிலத் தெவரளந் தறிவார்? 17

தன்னிலை தானும் அறிந்திட வொண்ணுத்
தத்துவம் நின்குடில் எய்தி
மன்னுநின் பாதத் தாமரை வணங்கி,
'மாமுனி! நின்னருள் சுமந்தேன்
துன்னிய வுலகை வென்றனென்!' என்று
சொற்றது; தமிழ்தரு முனிவ!
நின்னருட் பெருக்கை யிராகவன் அன்றி
நிலத்தினில் எவரளந் தறிவார்? 18

'ஐம்புலப் பகையைச் செற்றுல கத்தில்
அருந்தவம் புரிபெரி யவர்கள்
வெம்புரு வண்ணம் அருள்தரும் ஞான
விமலனே, நின்னருள் சுமந்து

நம்பனே! உயர்ந்தேன்' எனப்பகர் வானேல்
நாவல! நின்னினும் உயர்ந்தோர்
இம்பரின் இல்லை; உம்பரின் இல்லை;
இணையிலா முதலவன் நீயே. 19

பெருந்தவம் புரிந்து கொடியவ ராகிப்
பிறங்குமு வுலகையும் வாட்டி
வருந்துறச் செய்யும் அரக்கரை வெல்ல
வள்ளற்குப் படைக்கலம் நல்கி
இரும்புவிக் குற்ற நோயினைத் தீர்த்தாய்!
எம்பிரான்! நின்னரு ளின்றேல்
திருந்துமோ வுலகம்? காகுத்தன் வெற்றி
தென்றமிழ் முனிவ!நின் வெற்றி. 20

மண்ணுல கத்துப் பிணியினைப் போக்க
வந்தநன் மருந்துநீ என்கோ!
திண்ணிய வுள்ளத் திருட்டினை யகற்றத்
திகழ்ந்தொளிர் தீபமே என்கோ!
விண்ணவர் புரிந்த தவப்பயன் என்று
விளம்புகோ! பரம்பொருள் மகிழ
அண்ணல்நீ யளித்த படைக்கலச் சிறப்பை
அளவிட வல்லுநர் யாரே! 21

வேறு

கன்றிய மனமுறு வெந்திற லவனைக்
களத்தினில் வென்று நலத்தினைப் போக்கி,
'இன்றுபோய் நாளை யெய்துக! சால
இளைத்தனை! அறத்திறன் மதிக்குதி!' என்று
வென்றிகொள் பரமன் களத்தினில் ஓத
வீறுடு பகர்ந்தது சீரிய முனிவ!
நன்றுநீ வழங்கும் படையினுல் அன்றே?
நாவல! நின்புகழ் வாழிய என்றும்! 22

வேறு

தஞ்சமென் றடைந்த அமரரைக் காக்கத்
தனிச்சிறை புக்கமா தேவி
வஞ்சிநே ரிடையாள் சானகி காலில்
வயங்கிய நிகளத்தை யராவ

விஞ்சுசீர் அரமாய்ப் பொற்புறும் படையின்
மேன்மையை அரக்கர்கோன் அன்று
வஞ்சமி லுளத்தால் புகழ்ந்தனன்; முனிவ! 23
வள்ளலை யுயர்த்தினை நீயே!

நற்றமிழ் மொழியைப் படைக்கல மாக்கி
நாவலர் மகிழ்வுறத் தந்தாய்!
கொற்றமார் தவத்தைப் படைக்கல மாக்கிக்
கோதறு பரம்பொருட் களித்தாய்!
செற்றமில் முனிவ! நின்னடி மறவேன்.
சீரிய நின்புகழ் வாழி!
கற்றவர் பராவு செந்தமிழ் வாழி!
கலைவளர் நல்லறம் வாழி! 24

# 3. வான்மீகி

## திரு. ப. ஜனார்த்தனம்

காப்பு

ஆதிப் பிரமனும்நீ! ஆதிப் பரமனும்நீ!
ஆதிஎனும் பொருளுக்கு அப்பால் உண்டாகிலும்நீ!
சோதிநீ! சோதிச்சுடர்ப் பிழம்பும்நீ! என்று
வேதம் உரைசெய்தால், வெள்காரோ வேறுள்ளார்?

வாழ்த்து

நாத நாரதன் நல்கிய நம்பியின்
ஓத ரும்புகழ் உலக முணர்த்திடப்
பாத நான்கினல் பாடிய பாவல!
வேத மேநிகர் விமலனே! போற்றினேன். 1

வைய முற்றும் வாழ்த்துவான் மீகனே
மெய்ய தாங்கவி மீதுள காதலே
ஐய! நீதுறந் தாயலே. அன்னதே
நொய்ய தாயினும் நுவலுவ ருயினேன். 2

ஆசை எற்கும் அகத்தினில் தோன்றினும்
பூசை பாற்கடல் நக்கவும் போகுமோ?
ஏசி நிற்பினும் எஞ்சடை யப்பனே
ஆசி நல்கலால் அறைகுவ ருயினேன். 3

வேறு

உமையவளோ டீசனுறை உலகத்தின் உச்சியெனும்
இமயமுதல் இலங்கைவரை இடமாகக் கொண்டொருமை
அமையஒரு காவியத்தை அவனிக்குத் தந்தவனே!
சமையவதே கருத்தாகத் தமிழாலே கவிசெய்தேன், 4

தேவரொடு மானிடரைத் தீமைபுரி தைத்தியரை
மாவிலங்கு புள்ளோடு மற்றுமுள பாத்திரங்கள்
மேவிடவே காவியத்தை மேலோனே! படைத்திட்டாய்.
ஆவதுமுன் னூலன்றி ஆராற்ற வல்லாரே? 5

பூவிரியும் தமசையெனும் பொன்னதியின் கரையிருந்து
பாவிரியப் பாடியநின் பண்பான காவியத்தை
ஏவரையும் துணைகொள்ளும் எழிலான கருத்தாலே
காவிரியின் கரைவாழும் கம்பன்யான் தமிழ்செய்தேன். 6

கங்கையொடு காவிரியைக் கலந்திட்டாற் காடெல்லாம்
பொங்கிவிளை புலனுகிப் பொன்விளையு மென்பாரால்!
இங்கிதனை முன்கண்டுன் இதயத்தை இணைத்திட்டாய்
என்கருத்து மிதுவாக எழிலாரும் தமிழ்செய்தேன். 7

'வையத்து வாழ்வாங்கு வாழ்வாரே தெய்வம்,' எனும்
மெய்ம்மறையின் வாய்மையினை மேதினிக்குக் காட்டிடவே
பையரவிற் பள்ளிகொளும் பரமனையும் மானிடனு
ஐயமறக் காட்டினைநீ! அவனேயெம் ஆண்டானே. 8

வேறு

தன்னிகரில் தலைவனையும் தலைவியையும்
சந்தத்தே தந்தாய் ஐயா!
உன்னுடைய காவியத்தில் உளந்தோய்ந்த
உணர்ச்சியிலே உவந்து நின்றேன்!
அன்னபொழு தெஞ்சடையன் 'அருந்தமிழில்
தருக!' என ஆணை தந்தான்.
நின்னடியே துணைக்கொண்டு நிமலன்றன்
நீள்கதையை நிகழ்த்த லானேன். 9

எம்பெருமான் காவியத்தில் நீயுமொரு
பாத்திரமாய் இயங்கு கின்றாய்!
இம்பரிலே எழில்வேத வியாதமுனி
இதற்கிடாய் இயம்ப லாகும்.
நம்பியவன் முடிசூடும் நல்வேளை
நற்சடையன் நாமம் நிற்கக்
கும்பிட்டு மரபுள்ளோர் கொடுத்தமுடி
முனிக்கென்னக் குறித்தேன் ஐயா! 10

ஆதிகவி யானகவிக் கோகிலமே!
அருள்செய்த அமலன் காதை
ஓதியுணர் பொழுதினிலே உன்கதையைச்
சிறப்படைய ஒழுங்கு செய்தேன்.
மேதினியி லுன்புகழும் மேன்மையுள
ராகவன்றன் மீதி லன்பும்
சோதியினை உலகறியச் சொல்வதற்கே
மாற்றமதைத் துணிந்து செய்தேன். 11

காவியத்தின் நாயகியாய்க் கற்பினுக்கே
அணிகலனாய்க் காட்சி நல்கும்
தேவியவள் பட்டதுயர் சிந்தைசுடச்
சிறிதேனும் இன்பம் சேர்க்க
ஆவியினை யானைக்கண் டகமகிழும்
செய்தியினை அங்கே சொன்னேன்
பூவியலும் தன்மையினுள் பொற்பெல்லாம்
என்கவியில் பொருந்து மாறே. 12

வேறு

'வில்லியான் காடே கற்கு
விடைகொளத் தாதை பாதம்
புல்லினான்' என்றாய்; பின்னர்ப்
பொறுக்குமோ அன்பின் உள்ளம்!
வல்லனோ ஆறு நாள்கள்
வருந்திட வைக்க லாற்றேன்,
சொல்லிடா தேக வைத்துச்
சொற்பெற உயிர்ப்பி ரித்தேன்! 13

தூயராம் முனிவ ரில்லில்
துடிப்புடைக் குகனும் வேடன்
நேயனாய் நிமலற் கான
நீட்டிய பொருள்க ளுள்ளே
பாயசம் வடையு மப்பம்
பல்வகைப் பண்டம் சொன்னாய்;
ஆயவை தேனும் மீனும்
ஆக்கினேன் இயற்கை யென்றே. 14

'ஐயிரு தலையன் சீதை
அன்னையைக் கவரும் போது
கையினல் தொட்டான்' என்று
கழறினை; கடுக்கும் உள்ளம்;
ஐயனே? அவன்றன் ஆற்றல்
அவனியோ ரறியு மாறும்
வையகம் மகிழு மாறும்
வகுத்தனன் சிறிது மாற்றி. 15

'துந்துபி யுடலந் தன்னைத்
தூயவன் எற்றி ஞன்'என்
உன்றன துரையை, தம்பி
உழையவ னேவ லாலே
அந்தரத் துய்த்தா னென்றே
அறைந்தனன் ஆண்மை காட்டப்
பிந்துறு காதைக் கீது
பெருந்துணை யாகு மென்றே. 16

'தம்பியின் தாரம் வெளவித்
தவறிய வாலி தன்னை
எம்பெரு மானே தோன்றி
இயற்றினன் நீதி' என்ருய்;
தம்பியும் பின்னர் அந்தத்
தாரையைப் பெண்டாய்க் கொண்டால்
நம்பியின் சீலம் முற்றும்
நலிந்திட லாகு மன்றே? 17

என்னையா ளுடைய ஐயன்
எம்மனோர்க் காக வேண்டி
அன்னையோ டருங்கா னத்தில்
அலைந்தனன்; பிரிந்தாள் உற்ற
இன்னலைத் தீர்ப்பான் போன்று
இருநிலங் காவல் செய்தான்.
பின்னரும் சீதை நீக்கம்
பேசிட அடியேற் காமோ? 18

ஆதலான் மவுலி சூடி
 ஆண்டது வரையும் சொன்னேன்;
தீதுறு பாவம் தோற்கும்,
 செய்யநல் லறமே வெல்லும்,
மாதவக் காதை தந்த
 வான்மிக வள்ள லே!உன்
போதெனும் புனிதப் பாதம்
 போற்றியான் விடைகொள் வேனே! 19



# 4. அவ்வையார்

## திரு. அரங்க சீனிவாசன்

காப்பு

ஓயாத மலர்அயனே முதல்ஆக உளர்ஆகி,
மாயாத வானவர்க்கும் மற்றுஒழிந்த மன்னுயிர்க்கும்
நீஆகின் முதல்தாதை, நெறிமுறையால் ஈன்றுஎடுத்த
தாய்ஆவார் யாவரே? தருமத்தின் தனிமூர்த்தி!

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

முத்தமிழ் மன்னர் மூவரும் கூடி
முச்சுடர் ஒருவழிப் படல்போல்
ஒத்திருந் தமைகண்டு, 'உம்பர்வான் மீனில்
உயர்ந்துமேந் தோன்றுக!' எனவே
புத்தமிழ் தனைய பாடலால் ஆசி
பொழிந்திடும் ஔவை! நின் பாதம்
வைத்திடும் சுவட்டில் நடந்திட முயலும்
மைந்தன், நின் அடிமுடி புனைந்தேன்! 1

கடுகினைத் துளைத்தேழ் கடலினைப் புகட்டிக்
காட்டிடும் அற்புதக் கவியே!
வடுவறு மனத்துள் அறப்பெரும் பயிரை
வளர்த்திடும் காவிரி நதியே!
தொடுகடல் உலகில் மாந்தரின் வாழ்விற்
சுடர்தரத் தோன்றிய சுடரே!
படுசுவை யமுதப் பசுந்தமிழ் வளர்த்த
பாக்கிய மே! உனைப் பணிந்தேன்! 2

நடைமெலிந் தடைந்து கண்ணுறை யாக
நயந்துசில் அரிசியை இரக்கத்
தடையற நாஞ்சில் வள்ளுவன் களிறு
தந்தனன் என்பதும் வியப்போ?
மடைதிறந் ததுபோல் நின்கவி யமுதம்
மாந்திடும் பேற்றினைப் பெற்றோர்,
கொடைமடம் பட்டுக்—களிற்றினை மட்டோ—
குளிர்ந்துதம் ஆவியும் கொடாரோ? 3

கொல்லியங் கிரியின் விடரகத்து அரிதிற்
கொண்டதோர் கொழுஞ்சுவை பழுத்த
நெல்லியங் கனியை அளித்துவுனைப் பலநாள்
நிலைத்திட வைத்தனன் அதியன்.
'நல்லியல் இராமன் காதையைத் தமிழில்
நல்'கென எனையும்வாழ் வித்த
எல்லையில் குணத்துச் சடையன்பால் அதியன்
இயல்பினைக் காண்கின்றேன் அன்னாய்! 4

பலரொடும் பன்னாட் செல்லினும், தலைநாட்
பண்பினில் நண்பினில் அதியன்
தலையளி செய்த தன்மைக ண்டுருகித்
தமிழமு தொழுக்கிய அன்னாய்!
கலைகளைப் பயிற்றிக் கவிஞர்கோன் ஆக்கிக்
காவலர் கதிர்முடி வணக்கும்
நிலைமையை அளித்த சடையன்பால், அதியன்
நிறையினைக் காண்கின்றேன் அன்னாய்! 5

விடரகம் கொண்ட நெல்லியங் கனியை
விருப்புடன் நல்கி,உன் பூத
உடலினைப் பன்னாள் நிறுத்தினன் அதியன்.
'ஒளிமணி மிடற்றினன் போலக்
கடல்வளை புவியில் மன்னுக!' என்று
கதிர்மதி உளவரை அவற்கே
படர்புகழ் உடம்பை நல்கினை யென்றால்,
பார்க்கின்,இங் கியார்கொலோ சதுரர்? 6

என்னுடல் வளர இன்னமு தூட்டி
இசையினில் உயர்த்திய சடையன்
தன்னுயிர் உதவிக் கென்னகைம் மாறு
தருவதென் றேங்கினேன்! உன்றன்

சொன்னயம் கண்டேன்; சடையன்பேர், இராமன்
சுடர்முடி சூடிய பாட்டிற்
பொன்னெனப் பொதிந்து, நாவெலாம் அவன்றன்
புகழ்நடம் புரிந்திட வைத்தேன். 7

கனிதரும் அதியன் இறந்ததால், இரங்கிக்
கதறினை; 'பனித்துறைப் பகன்றைத்
தனிமலர் போலப் பயன்படா தழியும்
தவப்பல உயிரலா துலகில்
இனிஎவர் புலவர்க் கீகுநர்? அந்தோ!
இனிஎவர் பாடுவார்?' என்றே
பனிநெடுங் கண்சோர்ந் தழுதனை; அந்தப்
பாடல்என் மனம்பதிந் ததுவே! 8

'பரப்பிய புகழோன் அதியன்நெஞ் சினிலா
பாய்ந்தது பகைவர்கைந் நெடுவேல்?
இரப்பவர் தங்கள் கையுளும் போகி,
யாழ்வலார் கைம்மண்டை உருவிப்
புரப்பவர் புன்கண் பாவைசோர் தரவே
புலவர்நாப் பாய்ந்ததே!' என்ன,
எரிப்படும் சருகாய் நீயிரங் கியதென்
இதயமுற் றிடம்கொண்ட தன்னய்! 9

அதியனுக் கமைந்த கையறு நிலை,என்
அரும்பெறற் புதல்வனுக் காகித்
துதிபெறும் இராமன் பிரிவினில் தாதை
துடித்திடும் புலம்பலாய்ப் பெருகி,
முதிர்சுவை அளித்த தென்கவிக் கென்றல்,
முத்தமிழ்த் தெய்வம்!நீ உவப்பால்
உதவிய பிச்சை யன்றுகொல் உனக்கிங்
குற்றிடும் புகழெலாம் அன்னய்! 10

தொண்டையர் மன்பால் அதியனுக் காகத்
தூதுசென் றிளநகை அரும்பத்
திண்திற லவனைப் புகழ்ந்தது போல
இகழ்ந்திடும் செழுநகைச் சுவையே
எண்திகழ் அனுமன் இலங்கையர் கோனை
எள்ளிய நகைச்சுவை யாகிப்

பண்தரும் கவிதைக் குயிர்தந்த தென்றல்,
பண்ணுகைம் மாறுனக் குண்டோ? 11

'மேடுதான் எனினும் பள்ளமே எனினும்
வெம்பரற் காடுதான் எனினும்
ஆடவர் நல்லர் ஆயின்அவ் விடமே
ஆகும்நல் லிடம்'எனல் கண்டே,
'நீடும்ஐம் பொறியம் பொடுவிழி யம்பும்
நெறிபுறம் போகுதல் செய்யா
நாடெ'ன அந்தக் கோசலந் தன்னை
நான்விரித் துரைத்தனென் அன்னாய்! 12

'வேரொடும் பகைக்கின் வேரொடும் கெடும்'என்று,
ஓதும்உன் உரைபயின் றன்றோ,
'யாரொடும் பகைமை கொள்ளலர் என்றால்,
அரசர்தம் குடைநிழல் விரியப்
போரொடுங் கிடும்;நற் புகழ்ஒடுங் காது;
புனைந்ததார் ஒடுங்கல்செல் லாது;
வேரொடும் கெடல்உன் டாகுமோ?' எனயான்
வேந்தர்பண்பு உணர்த்திய தன்னாய்! 13

மென்தளிர் மலர்கள் கொய்திட வரும்ஓர்
வீரனைப் 'போரென விங்கும்
குன்றுறழ் புயத்தான்' எனப்புனைந் தடியேன்
கூறிய கொழுங்கவிச் சுவைதான்,
'மன்றினில் தூங்கும் வார்விசி முரசில்
மாருதம் பொரும்ஒலி கேட்பின்,
இன்றெழுந் ததுபோர் என்னும் என்தலைவன்!'
என்றநின் உரைபயின் றன்றோ? 14

கார்க்கடல் வண்ணன் எதிர்வரும் அவரைக்
கனிந்து,'எது வினை?நும் மனையும்
சீர்க்கும்நும் மகாரும் வலியர்கொல்?' எனவே
தெருவிடை வினவவைத் ததுதான்,
'ஊர்க்குறு மாக்கள் நீர்த்துறை கழுவப்
படியும்ஓர் ஒண்களி றெனவே
யார்க்கும்இங் கினியை பெருமநீ!' எனும்நின்
இன்கவி பயின்றதால் அன்றோ? 15

# 5. கபில - பரணர்

திரு. ரெ. முத்துக்கணேசன்

காப்பு

ஆழிநீ; அனலும் நீயே; அல்லவை எல்லாம் நீயே;
ஊழிநீ; உலகும் நீயே; அவற்றுறை உயிரும் நீயே;
வாழியாய்! அடியேன் நின்னை மறப்பெனோ! வயங்கு செந்தீச்
சூழுற உலைந்து போனேன்; காத்தருள் சுருதி மூர்த்தி!

*           *           *

## கபிலர்

தூய்மையே வடிவம் ஆன தொல்புகழ்க் கபிலர் செம்மால்!
காய்மையை அகற்றி நாளும் கடையெழு வள்ளல் போற்ற
வாய்மையும் சால்பும் பூண்டு வளர்தமிழ் நாடு வாழத்
தாய்மனம் கொண்ட நல்லோய்! தமிழ்க்குலம் வழுத்து மாலோ! 1

கனியினைத் துளைத்த வண்டு கனியினில் வீழு மாபோல்
முனிவினைத் துறந்த யோகி மோனத்தில் ஆழ்வ தேபோல்
நனிமிகு பாடல் ஓர்ந்தேன் 'நான்'இலை அதுவே ஆனேன்
பனியிருள் நீக்க வந்த பரிதியே உன்தாள் போற்றி! 2

இல்லினிற் பொருளை எல்லாம் எடுத்தெடுத் தடுக்கு வார்போல்
சொல்லினை அடுக்கிக் காட்டும் சொல்வித்தை எல்லாம் மாயக்
கல்லினில் வடித்த சிற்பம் கண்திறந் தருள்வ தேபோல்
சொல்லினில் குறிஞ்சி தந்தாய்; தூயன்நீ; உன்பேர் போற்றி! 3

மருவிலா மலர்கள் பூக்கும்; மலையிழி அருவி பாயும்;
பெருவினை அகல்வ தேபோல் பிடிசெலும்; சங்கப் பாவின்
திருவினை என்ன சொல்வேன்! திருவிசைக் கபில ஞானி!
கருவினை ஈன்ற தாய்போல் களிப்பினை அடைந்தேன் ஐயா! 4

அன்பொடு விருந்து வைத்தே அகத்தினுல் தமிழர் போற்றும்
தென்புலப் பண்பைப் பாவில் தெளிவுற உரைத்தாய்; சீதை
தன்பெரு விருந்தைக் காணத் தானிலே என்றே விம்மும்
துன்பினே எழுது தற்கோ தூரிகை ஆனுய்? வாழி! 5

பாலினைப் பருகுந் தோறும் பயன்தரும் ஊட்டம் நோக்கிப்
பாலினை விரும்பு மாபோல், பைந்தமிழ்க் கவிதை இன்ப
நூலினைக் கற்குந் தோறும் நுண்பொருள் இனிப்ப தேபோல்,
மாலறும் இராம காதை மதிவளம் பெருக்கு மாபோல், 6

தேரினை ஈந்து முல்லைத் தீத்துயர் தீர்த்த வள்ளல்
பாரிதன் நட்பைப் பெற்ருய்; பாவலர் வாழ்த்த நின்ருய்;
மாரியே திகைக்கு மாபோல் வளங்குநல் சடையன் ஆகி
பாரியே வந்தான் இன்று பைந்தமிழ் வளர்ப்ப தற்கே! 7

நீரிடை வாழும் இப்பி நீரிலாக் காலந் தானும்
நீர்நிலே அகலா தங்கு நிலேபெறும் தன்மை போலப்
போரிட வேந்தர் மூவர் புறப்பட்டு வந்த காலே
பாரிதன் இடுக்கண் காத்தாய்! பகர்நட்பின் சின்னம் நீயே! 8

வல்லநல் முனிவன் சாபம் வாட்டிட அகலி கைதான்
கல்லெனக் கிடந்தாள் ஆங்கு காகுத்தன் கழல்கள் மேவ
நல்லறப் பெண்ணுய் ஆன நளினம்போல் நீதி யோஉன்
சொல்லினுல் வண்ணம் பெற்ற சுவைநலம் கண்டோம் வாழ்க! 9

**பரணர்**

தேர்முதல் படையை வைத்தே திசையெலாம் ஆண்ட நாளில்
போர்வழிச் சென்றே வாழ்வில் புகழ்வழி பெற்ற நாளில்
நேர்மொழி எடுத்துக் கூறும் நிமலனேத் தேடும் நாளில்
சீர்பெற மொழிந்த சான்ருேன் திருமனப் பரணர் போற்றி! 10

அன்புடை நாட்டு மன்னர் அறத்தினில் வழுவா வண்ணம்
மன்பதை காக்கும் நல்ல மருந்தெனப் புறப்பாட் டில்தான்
என்புதோல் உறைக்கச் சொல்வாய்; எழில்வழிப் பாட வல்லாய்!
பொன்புகழ் கொள்வ தல்லால் புவிப்பொருள் விரும்பா மேலோய்! 11

தானிடர் படுவ தோராய்; தன்சுற்ற நலத்தை ஓராய்;
மானிடம் ஆகித் தோன்றும் மன்னுயிர் வாழ்வைத் தேர்வாய்;

மானிடர் ஆன மன்னர் மனத்திடர் பட்டுப் போரால்
ஏனிடர் படுவ தென்பாய்! ஈடிலா அன்பு கொள்வோய்! 12

விற்கலை பயின்றூர் வாளி விளக்கிடப் பொருளைக் காட்டும்;
நற்கலை பயின்ற நாவ! நட்பினில் சடையன் போலக்
கற்கவே இனிமை பூக்கும் காதலர் அகப்பா தந்தாய்;
சொற்கலைக் குறுந்தொ கைப்பாச் சுடர்பொருள் விரித்தோய் நீயே! 13

சிந்திடும் காதல் நெஞ்சச் சிலிர்ப்பினை உணர்த்துங் காலை
வந்திடும் காம வெள்ளம் வரையணைப் பொருளாம் உப்பால்
வந்திடா தடைக்கு மாமோ! வாழ்வியல் உவமைச் செல்வம்
தந்தனை ஐயா! உன்போல் தமிழ்மணம் பூத்தார் யாரே? 14

நிலத்தினில் வீரம் காட்டி நினைத்ததைச் செய்யும் மன்னர்
தலத்தினை அடைவ ரென்றே தாங்கொணு அச்சத் தாலே
குலத்தினர் துஞ்சார் போலக் குலத்தாயர் துஞ்சா ரென்றே
புலத்தினல் உவமை சொன்னய் புகழுறும் புலமை வாழ்க! 15

## கபில-பரணர் வாழ்த்து

காலத்தே உதவி செய்யும் கருணையே மனத்திற் கொண்டு
சாலநா டாளும் மன்னர் தவறெலாம் கடிந்து நின்ற
சிலமார் கபில தேவே! செந்தமிழ்ப் பரணர் கோவே!
ஞாலமுள் ளளவும் உங்கள் நல்லிசை நின்று வாழ்க! 16



# 6. கீர - மருதர்

'' தமிழண்ணல் ''

காப்பு

வையம்நீ! வானும்நீ! மற்றும்நீ! மலரின்மேல்
ஐயன்நீ! ஆழிமேல் ஆழிவாழ் கையன்நீ!
செய்யதீ அனையஅத் தேவும்நீ! நாயினேன்,
உய்யவந் துதவினுய், உலகம்முந் துதவினுய்!

*　　　　*　　　　*

**நக்கீரன்**

'அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடக்கும் கோதா விரிஎன உவமை சொன்னேன்';
புவிபுகழ் கீர நின்றன் பொற்புடை அகப்பாட் டெல்லாம்
சவியுறத் தெளியக் கற்ற தன்மையால் புகழ லுற்றேன்! 1

முந்திநீ மொழிய லுற்ற முருகாற்றுப் படையைக் கற்றேன்;
தந்தையே! கீர! நின்றன் தமிழ்மணம் கலந்த தாலே
சிந்தனை கூடி வாழ்த்தும் செங்கதிர் ஞாயி றன்ன
'கந்தனை அனையர் கூடிக் கலைதெரி கழகம்' என்றேன்! 2

'சிலம்பகம் சிலம்ப' என்று செப்பினை அகநா னூற்றில்;
தலம்புகழ் இராம காதை தன்னில்யான் கோச லத்தின்
நலம்புகழ் போதில் உன்றன் நற்கவி சிலம்பக் கேட்டுச்
சிலம்புவ சிலம்பச் செய்தேன் சிலம்பணி கவிதைக் கீந்தேன். 3

கொக்கினம் பறக்கக் கண்டு 'குமரனின் மார்பில் ஆரம்
ஒக்குமே' என்பாய் உன்றன் ஒப்பறும் உவமை கேட்டு
மிக்கதை எடுத்துக் கொண்டேன் மிகுபுகழ்க் காப்பி யத்தில்
தக்கதோர் புனைவு செய்து தமிழுக்குப் பெருமை கண்டேன். 4

'கல்வியில் பெரியன்' என்று காசினி புகழும் முன்னே
கல்வியைச் சங்க நூலிற் கற்றனென்; காப்பி யத்தில்
பல்விதப் புனைவும் ஈர்க்கும் பாப்புனை திறமும் பெற்றேன்
நல்வித மாகப் பாட நல்கினை கீர! வாழி! 5

பிரிவினல் வருந்தும் பெண்மை பெட்புற அமைத்தாய்; அந்தப்
பரிவுடைத் தலைவிக் கேற்ற பண்புடைச் சீதை தன்னைத்
தெரிவுறப் படைத்தேன்; ஆளன் செப்புமுன் பிரிவை ஓர்ந்து
'பிரிவினும் சுடுமோ காடு பேசெ'னப் பேச வைத்தேன்! 6

'நல்லிசை வேட்ட செல்வன் நயனுடைப் பொருளைப் போல
ஒல்லையில் செல்லும் மேனிப் பசப்பெ'ன உவமை சொல்வாய்!
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனத் தாட கைப்பெண்
கல்லொக்கும் நெஞ்சிற் பாய்ந்த கணைக்குநான் உவமை சொன்னேன். 7

வண்டிசை பாட நல்ல மயில்களை ஆட வைத்துத்
தண்டலைக் காட்சி தன்னைத் தருகுவென். அகநா னூற்றில்
பண்டொரு கபிலன் நின்போற் பாவலன் படைத்த காட்சி
கொண்டொரு கற்பனைத்தேர்க் கொடிதனை உயர்த்தி னேனே! 8

வேலனைப் புகழ்ந்தாய் கீர! விளங்குமிவ் வுலக ளந்த
காலினைப் புகழ்ந்து வண்ணம் காட்டினேன் விருத்தப் பாவில்!
கோலமார் அருவி பாயும் பழமுதிர் சோலை காட்டும்
கோலத்தைக் கோச லத்தில் கொட்டிநான் சித்தி ரித்தேன்! 9

நக்கீரன் பாட்டிற் போல நனிதமிழ் மரபைப் போற்றத்
தக்கவன் என்னும் பேரைத் தந்திடப் பெற்றேன் தெய்வம்
புக்கொரு புவனந் தன்னைப் புதுமைசெய் காட்சி பாடும்
மிக்கதோர் பேறும் பெற்றேன்; மேலும்நான் பெறுவ தென்னே! 10

## மாங்குடி மருதன்

மாங்குடிநல் லூருடையாய்! மருதனெனும்
 பெயருடையாய்! மதுரைக் காஞ்சி

தாங்கருநற் காப்பியப்பாத் தமிழுக்குத்
தந்திட்ட தனிச் சிறப்பில்
ஓங்குபெரும் காப்பியமே உருவாக்கும்
நினைவுற்றேன் ஊக்கம் கொண்டேன்
வாங்கருநற் பதநான்கும் வகுத்தவான்
மீகமதை வடித்துத் தந்தேன்! 1

உனக்கொருவன் நெடுஞ்செழியன், உலகறியும்
பெருவேந்தன், உவகை மிக்கோன்
தனக்கொருநல் உரைபுகல நிலையாமைத்
தத்துவத்தைத் தந்தாய்! இங்கே
எனக்கொருவன் சடையப்பன் இனித்தபுகழ்
தனைமிடைந்த இராம காதை
மனக்கினிய வீட்டுலக மாண்புதனை
உலகறியப் படைத்தேன் கண்டாய். 2

நெடுஞ்செழியப் பெருவேந்தன் 'நிலவரையில்
புலவர்களின் தலைவன்' என்றே
தொடுஞ்சரிதைப் புறப்பாடல் தனிற்புகழ்
அவன்பெருமை தொடுத்த சான்றோய்!
நெடும்புகழ்சேர் சடையப்பன் நிலவுலகில்
புலமையரச சோச்ச வெற்குக்
கொடுதந்த வண்மையினைக் கோமகனின்
காதையில்நான் கோத்து வைத்தேன்! 3

வாளைமீன் தேக்கொக்கின் தீம்பழத்தைக்
கதுவுகிற காட்சி தன்னைக்
காளைதன் நாட்டகத்தே கண்டுரைத்தாய்
மருதனெனும் சான்றோய்! நின்போல்
வாளைதா வுறுகின்ற கோசலநா
டதனைநான் புனையும் போதும்
பாளைவாய்ச் சிரிப்பொளிரும் பைந்தமிழ்நாட்
டெழிலினையே படைத்தேன் கண்டாய்! 4

மதுரைநகர் உனதுகவி மடிமீதில்
தவழ்ந்தொளிரும், அயோத்தி என்றன்
மதுரமிகு கவியதனில் மகிழ்ந்தொளிரும்
வண்ணமெலாம் ஒன்றே யாகும்.

சதுராடும் இளையவரும் தமிழ்பாடும்
இனியவரும் சார்ந்து நிற்கும்
புதுமைமிகு தமிழகத்தைக் கோசலத்தில்
புனைந்திட்டேன் புலமை பெற்றேன்! 5

சொற்களில் இலக்கணத்தில் தொடரினை
ஆள்கின்ற தூய போக்கில்
கற்பனையில் புனைவுகளில் கருத்துமிகும்
உவமைகளில் கலைத்தி றத்தில்
பொற்புமிகும் வடிவமைப்பில் புகழ்மிகுந்த
வண்ணமெனப் போற்றும் சந்த
அற்புதத்தில் நின்றொப்பார் அருங்கவிதை
மரபுவழி அறிந்து சென்றேன். 6

முல்லையையும் குறிஞ்சியையும் முறைமாறு
பாலையையும் மருதம் நெய்தல்
எல்லையையும் எடுத்துரைக்க எழில்தரும்உன்
சித்திரத்தை எடுத்துக் கொண்டேன்
தொல்புகழ்சேர் சரயுநதி தொடர்ந்தோடும்
நிலப்பகுதித் தோற்றம் தன்னைக்
கல்லிடையே பிறந்துவரும் நீத்தமதைப்
பரம்பொருளாய்க் காட்ட லானேன். 7

கராஅமருவு நெடும்புனலிற் கடிதாக
விரைந்தேகிக் கடுவேல் ஏந்தி
இராதவணம் அவுணர்களை எதிர்த்தழித்த
தமிழ்முருகன் உவமை சொல்வாய்!
பராஅவருநற் புகழுடையான் பரம்பொருளிங்
கவதரித்தான் பண்பு மிக்க
இராமனது கதைபுகல எழுச்சிதரும்
மனவுணர்வை எனக்குத் தந்தாய்! 8

எழிலார்ந்த நல்வாழ்வும் ஈடற்ற
பண்பாடும் சமய மெல்லாம்
பொழிலார்ந்த மலர்களெனப் பூவுலகிற்
சமமென்னும் பொதுமை நோக்கும்
அழிவுறுமோர் உலகமதன் அவலமதை
உணர்திறனும் அறிவுற் றோர்பால்
கழிபெருநல் லுவகையுடன் கழிப்பதற்கு
வழிசொல்லும் கருத்தும் தந்தாய்! 9

மருதனெனும் பெயருடையாய்! மனமுவக்கும்
சித்திரங்கள் வடிக்க வல்லாய்!
உருவமைந்த நாடகம்போல் அகப்பாட்டும்
புறப்பாட்டும் உரைக்க வல்லாய்!
அருமைஎலாம் அமைந்தொளிர அறமுணர்த்தும்
காப்பியத்தை அடியேன் ஆக்கப்
பொருவரிய நினதுதவி புகலரிய
தெனஉரைத்துப் போற்றி செய்வேன்! 10



# 7. வள்ளுவர்

## திரு. அர. சிங்கார வடிவேலன்

காப்பு

நிற்கும் நெடுநீத்த நீரில் முளைத்தெழுந்த
மொக்குளே போல, முகுளித்த அண்டங்கள்
ஒக்கஉயர்ந்து, உன்னுளே தோன்றி ஒளிக்கின்ற
பக்கம் அறிதற்கு, எளிதோ? பரம்பரனே!

*    *    *    *

ஏழு சீரிலே இந்த ஞாலமே
வாழு வகையினை வகுத்த வள்ளுவ!
சூழு தெண்கடல் போலு நெஞ்சிலே
வாழு நல்லறம் வழங்கி வாழ்த்துவாய். 1

உலக ளந்தவன் ஒப்பில் இராகவன்
இலகு மாக்கதை எழுது போதிலே
உலகெ னத்தொடங் குபாய நல்கிய
அலகில் சோதியுன் அடிவ ணங்குவேன். 2

ஆயிரம் வேதம் அறிந்தவ ராயினும்
ஆயநூற் கல்வி அடைந்தநற் பயன்பெறல்
தூயவன் மலரடி தொழுதலே என்றதால்
வாயினுல் இராமனை வணங்கி உய்குவேன். 3

சூத்திரம் போன்றுநீ சொன்ன பண்பெலாம்
பாத்திர மாக்கியே பார்ப ரப்பினேன்.
நேத்திரம் போலவுன் நிலைத்த சொல்பொருள்
ஏத்துநற் காதையின் இடையிடைப் போற்றினேன். 4

கரம்பல பெற்றவன் கடவுள் தந்தவான்
வரம்பல உற்றவன் வரம்பில் ஆற்றலான்
சிரம்நனி சிந்தினன் சீதை வவ்வலால்
பிறன்மனை நயத்தலின் பீடை அந்நிலை. 5

குன்றெனும் இராவணன் கொல்லும் வெம்படை
குன்றுடை பாளையாய்க் குமையும் போதிலே
இன்றுபோய் நாளைவா என்ற இராமனின்
ஒன்றிய குறளின்னை ராண்மை ஆவதே. 6

கண்ணொடு கண்ணிணை கவ்வி நோக்கலால்
அண்ணலும் சீதையும் அகங்க லந்தமை
உன்னருங் குறளினை உணர்ந்த பெற்றியால்
என்னரு நூலிலே எழுதி வைத்தனன். 7

சொல்லினாற் சுட்டுக் கொல்லும் தூயநற் கற்பி னாளும்
அல்லலின் நாற்றங் காலாம் அரக்கர்பால் வாடும் நாளில்
வில்லவன் பழியை எண்ணி வேதனை சகித்துக் கொண்ட
வல்லமை, குறளிற் சொன்ன மனைவியின் நலமே யன்றோ? 8

தறையொடும் பெயர்த்துச் சென்று தமிழொடும் பிறந்த கற்பைச்
சிறையிலே வைத்த போதும் சிந்தையைச் சந்தை யாக்கும்
கறையினான் ஆற்றல் எல்லாம் காலிலே தூசாய்ச் செய்து
நிறையினால் வென்ற பெற்றி நிகரிலாக் குறளின் வெற்றி. 9

அலைகடல் தூர்ந்த போதும் அகல்நிலம் பிளந்த போதும்
மலையெலாம் தகர்ந்த போதும் மழையெலாம் தகித்த போதும்
நிலையிலே தவறி டாத நிகரிலாச் சான்றாண் மைக்குத்
தலைமுடி கொடிய கானம் சமமென மதித்தான் சான்று. 10

சிரங்கையும் முத்தாய்க் காணும் சிந்தையைக் கொண்ட தாலே
குரங்கையும் நட்பாய்க் கொண்டான் குகனையும் தம்பி என்றான்
அரங்கிலே ஆட வந்த அனைத்தையும் ஒன்றாய்க் காணும்
அரங்கினைக் கதையில் வைக்க அகத்தினைக் குறளில் வைத்தேன். 11

வடக்கிலே கதையைப் பெற்றேன் வழக்கிலே அதனைக் காட்டச்
சொடக்கிலே அறத்தைச் சொல்லும் தூயநற் குறளின் செய்தி
மடக்கிலே குடித்த தாலே வடமொழி தமிழாய் மாற்றிக்
குடக்கிலும் ஞாயி றாகக் கொடியினை நாட்டு கின்றேன். 12

வெல்லுதற் கரிய ரேனும் விழுவார் சொல்லில் என்று
சொல்லுதற் கரிய சொல்லும் சுந்தரக் குறளுக் கென்றும்
வல்லவன் வாலி மாய வள்ளலும் மறைந்து கொல்லச்
சொல்லவும் வல்லான் ஆன தூயவன் அனுமன் சாட்சி. 13

விலங்கியல் வாழ்வென் றாலும் வேற்றவர் பெண்ணைச் சிந்தை
கலங்கிய ஆசை யாலே கவர்ந்திடல் பாவம் என்று

புலங்களின் தூய்மை காட்டும் பொன்னுயர் குறளைக் காட்ட
விலங்கெனும் வாலி கொன்றேன் வெற்றியைக் குறளுக் கீந்தேன். 14

பெண்வழிச் செல்வா ராஞல் பெருநிலம் ஆள்வா ரேனும்
மண்வழிச் சேர்வார் என்னும் மணிக்குறள் உண்மை காட்டக்
கண்வழி அம்பி ஞலும் கைகயி வரத்தி ஞலும்
திண்தலை பத்தும் சிந்தித் தீயவன் மாளச் செய்தேன். 15

குன்றெனப் பொருள்வந் தாலும் குவலயம் கைவந் தாலும்
நன்றென உயர்ந்தோர் சொன்ன நடுநிலை தவறி வந்தால்
அன்றெனத் தவிர்க என்னும் அருங்குறள் நெறியைக் காட்டப்
பன்றியின் உணவாய்க் கொண்ட பதவியைப் பரதன் விட்டான். 16

நல்லவர் தவங்கள் வாழ நாட்டவர் கதையைக் கேட்க
அல்லவர் பாவம் தூண்ட ஆவினன் பாலைப் போன்ற
நல்லவள், கூனி பெய்த நஞ்சினுல் திரிந்த தன்மை
வல்லது விதியே என்னும் வள்ளுவன் குறளே அன்ருே? 17

மனைவியைப் பேயே என்றும் மகனையும் பிணமே என்றும்
நினைவிலே வைது விட்டு நிலத்திலே சரிந்தான் மன்னன்
தனையவர் வருத்த நேர்ந்தும் தயரதன் மீண்ட போதில்
அனையுடன் தம்பி யாகும் அருள்வரம் கேட்டான் இராமன். 18

வரத்தினுல் மண்ணைக் கொண்டும் மலர்மகள் சீதை யோடு
சுரத்திலே போக்கி விட்டும் சொல்லொணு இடர்தந் தாலும்
தரத்தினுல் வென்று விட்ட சால்பினன் இராம வள்ளல்
உரத்தினுல் பொறுமை காட்டும் உலகையும் வென்று விட்டான். 19

மும்மைசால் உலகுக் கெல்லாம் மூலமாம் இராம வள்ளல்
தம்மையே பிறர்க்கு நல்கும் தனிப்பெருங் கருணை யாலே
வெம்மையால் அருளும் காட்ட வில்லினை ஏவி விட்டான்
இம்மையில் அறமே வெல்லும் என்பதே இராம காதை. 20

அறம்பொருள் இன்பம் என்னும் அனைத்திலும் அறமே காட்டும்
பரம்பொருள் குறளே ஆகும், பாத்திரப் படைப்பி ஞலும்
திறம்பெறு கதையி ஞலும் திதிப்பினைக் கலந்து, முப்பால்
உரம்பெற, இராம காதை உதித்ததை உணர்வீர் நல்லீர். 21

வள்ளுவன் குறளைக் கற்று வாக்கிலே தூய்மை பெற்றேன்
உள்ளத்தின் உயர்வும் வாக்கில் ஒளிவிடும் தெய்வ வீச்சும்
வள்ளுவன் தந்த வித்து. வளர்த்ததே என்றன் பங்கு.
துள்ளுமென் பாட்டுப் பூவால் தூயனை அருச்சித் தேனே! 22

# 8. இளங்கோ

## திரு. அப்துல் ரகுமான்

காப்பு

காண்பார்க்கும் காணப்படு பொருட்கும் கண்ணுகிப்
பூண்பாய்போல் நிற்றியால், யாதொன்றும் பூணுதாய்;
மாண்பால் உலகை வயிற்றுஒளித்து வாங்குதியால்;
ஆண்பாலோ? பெண்பாலோ? அப்பாலோ? எப்பாலோ?

* * * *

நிலைமண்டிலவாசிரியப்பா

புவியினுக் கணியாய்ப் பொருளெலாம் வழங்கி
அவியகத் துறையுடன் ஐந்திணை அளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென் ருெழுகும்
கவிநதி சுரந்த கல்வி மலேயே!
வாழை அடியிலோர் வாழையாய் வந்த 5
ஏழையேன் வணக்கம் ஏற்பாய்; மின்னலின்
மறையுமிவ் வுடம்பினே மாரு அன்பின்
அறுசுவை அமுதம் அளித்தா தரித்த
சடையனின் நன்றி உடையேன் எனின்என்
கலேயா உடம்பாம் காப்பியம் வளர 10
முலேத்தாய் ஆகி முன்னின் றுதவி
ஒன்பான் சுவைப்பால் ஊட்டிய நின்பேர்
அன்பென் அகத்தினின் றகலற் பாலதோ!
சேரநாட் டிளவல்நீ! செங்கோற் சோழர்தம்
ஈரநாட் டுதித்தவன் யான்,என் நாட்டிடை 15
உதித்த கற்பின் ஒளியைத் தெய்வமாய்
மதித்தது நின்திரு மணிநா டெனின்அந்
நன்றிதான் என்நா நவிலற் பாலதோ!

புகார்நகர் வாழ்வோர் புலம்பி வேற்றூர்
புகார்எனும் புகழ்மொழி போய்க்கெடக் கோவலன் 20
வாடல் உற்று மறுநகர் புகுந்தனன்
'கூடலோ' காதலர் குலையப் பிரித்தது;
வஞ்சி யெனும்பெயர் வாய்ப்பினும் வஞ்சியை
வஞ்சி யாத நகர்நின் வஞ்சியே!
பால்நகை முத்துப் பல்நகைப் பாவை 25
கால்நகை யால்தன் கழுத்து நகையை
இழந்த துயர்க்கதை எழுதிய கோவே!
பழந்தமிழ் அன்னைக்குப் பாவால் நீசெய்
மேலணி, தலையணி எனினும், மெல்லியல்
காலணிப் பெயரைக் காதலித் தளித்தனை; 30
அடிகள் எனும்பெயர் அடைந்த அறிஞ!
அடிகள் அணிவது சிலம்பே அன்றோ!
நீயர சாள்வாய் என்ற நிமித்திகன்
வாயுரை சினந்து மாணரசு துறந்து
போயினை என்ற போழ்து புகழினோய்! 35
ஆயிரம் பரதரும் ஆவரோ நினக்கிணை?
பிறந்ததும் வளர்ந்ததும் பெண்ணால் என்பதை
மறந்து பேயென மாதரை ஏசித்
துறந்தவர், அறிவையும் துறந்தவர் அன்றோ?
துதிசெயும் தெய்வமாய்ப் பெண்மையைத் தொழுத 40
அதிசயத் துறவிநீ! அற்புதப் பிறவிநீ!
பேணநோற் றதுமனைப் பிறவி, பெண்மையோ
காணநோற் றுயர்ந்தது கண்ணகி தோன்றலால்
மாணநோற் றிருந்தகற் பென்பதோ வான்புகழ்
பூணநோற் றுயர்ந்தது புலவன்நீ தோன்றலால். 45
என்று பிறந்தோம் என்றறி யாத
தென்றமிழ்ப் பாவை தெய்விக மதுரைத்
தொட்டிலில் கிடந்து தூயவர் ஊட்டிய
சங்கப் பாலுண் டங்கம் வளர்ந்து
வள்ளுவ ஆசான் பள்ளியிற் பயின்றுநின் 50
காப்பியம் அதனில் பூப்படைந் தாள்நின்
ஏடக அரங்கில் இசைத்திறம் காட்டிப்
பாடக மணிந்துயர் நாடகம் செய்தாள்;
மூன்றாய்ப் பிரிந்த முத்தமிழ் நிலத்தைச்
சான்றோய்! நினது தமிழால் சேர்த்தனை; 55

உன்னூல் மும்மணி ஒன்ருய்க் கோத்த
பொன்னூல் ஆகிப் புகழிற் பூத்தது!
இத்தி ருத்தகு ஏட்டினை வேதநூல்
ஒத்தி ருக்குமென் ருல்உரை ஒக்குமோ?
பத்தி னிக்கொரு பாட்டுடைக் கோயிலும் 60
முத்து முத்தமி ழும்தந்து முற்றலால்
மூவடி அளந்தன முழுமையும் முத்தமிழ்ப்
பாவடி யால்அளந் துயர்ந்த பாவல!
பாவியல் பழுத்தநின் பாட்டுடைச் செய்யுள்
காவியப் புலவரின் கலைதெரி கழகம் 65
தொடர்நிலைச் செய்யுள் தொடுப்பவர் கற்கவோர்
அரிச்சு வடிநீ அளித்தனை, அவ்வழி
'அரி'ச்சு வடியான் ஆக்கினன் ஆசையால்!
மானுட வடிவில் வானிடத் தெய்வம்
இறங்கி வந்ததை எழுதிய வன்யான்; 70
மானுடப் பெண்ணோர் வானிடத் தெய்வமாய்
உயர்ந்த செய்தியை உரைத்த கவிஞன்நீ!
வானுடைத் தேவரை மற்றுள குழுவை
மானுடம் வென்றதை மாண்புறக் காட்டினை!
இல்லியல் பிழைத்துப்பின் ஏற்றசா பத்தால் 75
கல்லியல் ஆனவள் களங்கம் நீக்கியோர்
மெல்லியல் ஆக்கிய வில்லியல் வள்ளலின்
கால்வண் ணத்தைக் கண்டேன் அங்கே!
விலைமகள் குலத்திடை விளைந்த பூவையைக்
குலமகட் குழுவும் கும்பிடக் கற்பின் 80
தலைமகள் ஆக்கிய தலைமைப் புலவ!நின்
கைவண் ணத்தைக் கண்டேன் இங்கே!
வடதிசை தோன்றி வான்புகழ் தெற்கில்
நடந்த நதிக்கதை நானெடுத் துரைத்தேன்!
தெற்கி லிருந்து வடக்கைத் தேடிப் 85
பாய்ந்த ஆறுநின் பாவர லாறு.
நல்லதோர் நூல்செய நம்மை அழைத்தது
வில்லவன் வானவன் விளைத்த வீரமே!
அண்ணலின் காலணி அரசு புரிந்ததோர்
எண்ணரு வியப்பை எழுதினென் அடியேன்! 90
அரிவையின் காலணி அரசையே கவிழ்த்ததன்
விரிவையுன் காவியம் வியப்புறப் புனைந்தது!

இனிதுற நடந்தநம் இருவர் கதையிலும்
கூனியின் தோற்றமே கூனல் விளைத்தது!
தாவி வந்தமா தவிக்கச் செய்ததென் 95
பூவியல் தலைவியை; புலவ,நின் தலைவியோ!
மாதவி மாஞல் மாதவிப் புற்றனள்!
மின்னல் இடையின மெல்லின மாதரை
வல்லின மாக்கும் இல்லினக் கற்பை
ஏத்திய கவிஞர் இருவரும்! சீதையோ, 100
கனலையே எரித்த கற்பின் கனலி;
கண்ணகி யோ,தன் கண்ணீர் கொண்டே
கனல்மூட் டியதோர் கனலின் கற்பி!
இல்லாள் உற்ற இன்னலைக் கணவன்
வில்லால் நீக்கிய வீரம்நான் விரித்தேன்; 105
கொண்டான் கொண்ட பழியை அவன்மனை,
சிலம்பால் நீக்கிய சீர்க்கதை நின்கதை;
என்கதைத் தென்னவன் இன்னுயிர் கொடுத்துப்
பெரும்பழி கொண்ட பித்தன்! உன்கதைத்
தென்னவ ஞேதான் தேடிய பழியை 110
உயிர்கொடுத் தழித்த உத்தம மன்னன்;
தவிக்கும் கோவலன் தாங்கருந் துயர்நிலை
புவிக்கு ணர்த்திய பொழுதில் உவமையாய்ச்
செவிக்குத் தேனென இராகவன் புகழைக்
கவிக்குள் நிறுத்திய கவிக்கு நாயக! 115
தடையி லாதநின் தண்ணறுஞ் செய்யுள்
நடையின் நின்றுயர் நாயகன் கதையையே
தொடைநி ரம்பிய தோம்அறு நூலாய்ச்
சடையன் உதவத் தந்தனென்; வேறென்?
முத்த மிழ்த்துறை யின்முறை போகிய 120
உத்தமக் கவிஞ! உன்உயர் பாவோ;
ஆசிரி யப்பா, அடியேன் பாவோ?
மாணவப் பாஅதன் வழிநான் கற்றதால்
அருங்குணத் தலைவியை அறிமுகம் செய்வுழி,
பெருங்குணங் களேஅப் பெண்ணைக் காதலால் 125
நெருங்கும் என்றே நீநவின் ருய்;நான்
அணங்கன சீதையின் அருமையைக் கூறுங்கால்
குணங்க ளேஅக் கொம்பினைச் சேர்ந்துயப்
பிணங்கும் எனவுனைப் பின்பற்றிப் பாடினேன்;

மண்மகள் அறியா வண்ணச் சிறடிப் 130
பெண்மகள் கண்ணகி பேதைமை உணர்த்த
முதிராக் கிளவியின் முள்ளெயி றிலங்க
'மதுரை மூதூர் யாதெ'ன வினவிய
உரையில் என்மனம் உருகினன் அதனுல்!

ஆண்டை நகர்வாய் அகலா முன்னர் 135
'யாண்டை யதுகான்?' என்னும் வினவை
வேண்டி அமைத்தேன் மிதிலைச் செல்விவாய்;
கோவலன் காதற் கோதை உடன்வர
ஆவலோ டணுகிய அந்த மதுரையோ
கொடுந்துயர் தரும்எனக் குறிப்பின் உணர்த்தப் 140

பறக்கும் ஆரெயில் பதாகைகள் அவனை
மறிக்கும் கைகளாய் வருணித் தனைநீ!
மணம்புரி கமல மலரின் நீங்கி
குணம்புரி கமலக் குளிர்கண் ஐயனை
மணம்புரி ஆசையில் மாதவள் இருக்கும் 145

நகர்என உணர்த்த நாயகன் முன்னர்
விழைவுடன் அசைந்த மிதிலைக் கொடிகளை
அழைக்கும் கைகளாய் அசையவைத் தனன்யான்;
விருந்தெதிர் கோடலை இழந்ததே தனது
பிரிந்துறை பொழுதின் பெருந்துயர் என்ற 150

திருந்திய கற்பினுள் சீர்மையை வியந்தே
இலங்கையில் பிரிவால் கலங்கிய சீதையும்
இலங்கிய வில்லோன் இராமன் காட்டினில்
'விருந்து கண்டபோ தென்னுறு மோ!'என
வருந்திய தாய்என் வார்த்தைகள் வார்த்தேன். 155

சீரகப் படும்நூல் சிந்தா மணியில்
ஒரகப் பையேநான் உவந்து முகந்தேன்;
பொய்யில் கேள்விப் புலமையி னேய்!நின்
'தெய்வ மாக்கவி' திரவியம் அதனில்
செவ்விய மதுரம் சேர்ந்தன பொருளின் 160
சீரிய சூரிய தீஞ்சொல் பலவும்
வவ்விய கவிஞன்யான் மறப்பனே நன்றியை!

சமய நதிகளின் சங்கமக் கடலே!
வாதமிட் டிகலும் பேத மதங்கள்
பேசும் பேச்சினைப் பிணக்குறும் பிணக்கை 165
வாச மாலையா வடிவுறத் தொடுத்து

நேசமாய் அணிந்தவர் நினைப்போல் யாருளர்?
நவரசம் மட்டுமே கவிரசம் என்பார்
நாணுற நினது நடுநிலைத் திறத்தால்
சமரசம் என்பதோர் அதிரசம் சேர்த்துப் 170
பத்தி ரசங்களைப் பாடிய கவிஞன்நீ!
சேரன் என்பதால் சேர்த்தனை அனைத்தும்.
நிலவரை தருபொருள் வழித்தமிழ் நிரப்பிய
புலவனே! காவியப் புலம்,பயிர் செழிக்கப்
பொன்னேர் பூட்டிய புகழ்ச்சொல் உழவனே! 175
முன்னோர் உன்னோர்; பின்னோர் என்னோர்.
என்றும் உளதமிழ் இயம்பிய இசையோய்!
நன்றி மலர்களை நான்சொரி கின்றேன்;
இளங்கோ போற்றுதும் இளங்கோ போற்றுதும்
களங்க மிலாததோர் காவிய அமுதை 180
உளங்களுக் கூட்டி உயர்த்துவ தாலே!

---



---

# ൯. கொங்குவேள்

திரு. ம. வே. பசுபதி

## காப்பு

நீ ஆதி பரம்பரமும்; நின்னவே உலகங்கள்;
ஆயாத சமயமும் நின்அடியவே; அயலில்லை
தீயாரின் ஒளித்தியால்; வெளிநின்றால் தீங்குண்டோ?
வீயாத பெருமாயை விளையாட்டும் வேண்டுமோ?

## கட்டளைக்கலித்துறை

நம்பன் இராகவன் நாயகன் றன்கவி நன்குசெயச்
செம்பொன் பொழிகொடை வெண்ணைமன் தண்ணிழல் மேவியுள
நும்பொருள் தன்னிலாழ்ந் தின்பொருள் கண்டுநன் கின்பமுறும்
கம்பனென் றென்பெயர் கட்டுரைக் கும்இந்தக் காசினியே! 1

அருங்கதை யாவுளும் ஆன்ற பெருங்கதை தென்தமிழில்
வருங்கதை செய்து வளஞ்செயும் கொங்குவேள் மாப்புலவீர்!
இருங்கள்நும் பாதப்போ தென்சென்னி யுற்றிட ஏத்துகப்பேன்
தருங்கவிச் செல்வமிக் கேந்திய ஞான தயாபரனே! 2

வேளாண் மரபை விளக்கிய கொங்கு வியன்புலவோய்!
கேளாம் சடையனின் கீர்த்தி கொடையினுற் கொண்டனை நீ;
தாளாண் விசயநன் மங்கலந் தன்னில் தகைந்ததனுல்
மாளாப் பெருங்கதை மாட்சி விசயமும் நாட்டினையே! 3

சங்கத்தார் கேட்ட வினக்கணைக் குன்நற் பணிமகளே
தங்கு விடைசொலச் செய்தனை; இன்''நெற் படிவிளை''என்(று)
இங்கென் பணிப்பெண் விடையெனத் தேன்பா இயம்பினளால்
பொங்கும் அருகக் கடலுறை செஞ்சொற் புதுக்கவியே! 4

உன்பெருங் காதையின் உற்ற பலநலம் ஓர்ந்தெடுத்தே
என்பெரு மால்கவிக் கேற்றதாம் என்றுநான் ஏன்றுகொண்டேன்
கன்றுசூழ்ந் துண்ணக் கறவையன் பீயும் கருத்தெனவே
என்றுமென் னுள்ளும் அருள்கறந் தீயும் எழிற்கவியே. 5

சீலநல் லுஞ்சை, இலாவணம், மாகதம், சீர்மிகுந்த
கோலமார் வத்தம், நராவணம், சன்யாசம் கூர்ந்துரைத்தாய்
பால, அயோத்தி,நல் ஆரண்யம், கிட்கிந்தை, சுந்தரத்தோ
டேலும்பேர் யுத்தமாம் ஆறெனுங் காண்டங்கள் என்கவிக்கும். 6

ஆறெனுங் காண்டங்கள் ஆறெனச் செய்தனை; அந்நெறியே
ஆறெனுங் காண்டம் அடியனேன் செய்தேன்; அகல்நிலத்தோர்
வேறென என்நெறி சொல்லல் விழைகிலேன்; அவ்வுரைகள்
ஊறென உத்தர காண்டம் உரைத்திலேன், உண்மையிதே. 7

வான்மிக மேலோன் வடமொழி தன்னில் வரைந்ததனை
ஆன்மிகத் தென்மொழிக் காக்கினென் ஞாலம் அருளுறவே
தேன்மிகும் அந்த மொழியின் உதயண காவியம்நீ
மான்மிய மாகப் பெருங்கதை யாக்கி மகிழ்ந்தனையே! 8

முன்னும் பலர்கவி மூண்ட உதயணன் மொய்ம்புகளை
இன்னும் செயவென வேய்ந்தாய்; எளியேனும் இந்நெறியே
முன்னும் பலர்நா முகிழ்த்த கருஞ்செம்மல் மூதருளைப்
பின்னுஞ் செயலுற்றேன் பேரிறை நேயம் பிறங்குறவே. 9

நூற்பேர் இராமன் கதையென ஏழை நுவன்றிடினும்
ஏற்புற என்பேர் இணைத்தென தோழர் இயம்பலுற்றார்;
நூற்பேர் பெருங்கதை என்றே நுவன்றனை; நுண்புலவோர்
ஏற்புறு கொங்குவேள் மாக்கதை என்றே இயம்பினரே. 10

ஐந்தெழுத் துற்ற பெருங்கதை என்றே அமைத்தனைநீ!
ஐந்தெழுத் தேகொள் இராம கதையென் றமைத்தனென்யான்.
இந்தவா றெங்ஙனம் காணினும் நும்வழி யானினிதே
வந்தவா காண்குவர் வண்மைத் தமிழ்ச்சுவை வண்டினரே. 11

கலைவல்லான் உன்சொற் கவினின் உதயணன்; காண்கருணைச்
சிலைவல்லான் எம்தே இராகவன்; சீர்த்தி உதயணற்கு
மலைவிலா யூகிநன் மந்திரி; அன்ன அனுமனெனும்
நிலைவலான் மாலுக்குத் தொண்டு நிகழ்த்தி நிமிர்ந்தனனே. 12

புற்றுடைக் காடெலாம் நாடாகப் போந்த இராகவன்பின்
பற்றுடைத் தேவி செலுங்கவி பாடிப் பதைப்புறுங்கால்
மற்றுடை யாவொடுந் தாதையை நீத்தும் மனாளனொடு
கற்றுடைத் தத்தையக் கான்புகல் எண்ணிக் கலங்கினனே! 13

'ஒன்று புரிகற் புலகு விளக்க முறவெனவே
பொன்றலும் சீர்த்தியாம் என்றநற் சீதையைப் போலெ'னவே
நின்றவத் தத்தையை நீசொன்ன பாத்தொடர் நெஞ்சமுத்தி
என்றனிச் சுந்தரக் காட்சியைக் கண்ணீர்க் கியற்றினனே. 14

சொன்ன உரையிதில் சூதிலை; பொய்யிலை; சூழ்புலவோர்
'மன்னன் கவிக்கொங்கன் மாத்தமிழ் ஓர்நெறி மட்டிலுமா
உந்நெறி? ஆயிடின் என்ன இதிற்புதி தெ'ன்னுவரால்;
அன்ன மொழிக்கென உந்நெறி மாற்றங்கள் ஆய்ந்துரைப்பேன். 15

சேர இருமாதர் சிந்தை யினுலும் தொடாச்சிறப்பின்
வீர இராமன்றன் கொற்றத்தின் சால்பு விளக்கினன்யான்;
தாரம் பலவெனத் தானுரைத் தன்பு தனைப்பகிர்ந்த
தீர உதயணன் செய்தித் தகைமைநீர் செப்பினிரே. 16

மந்திரி யூகிதன் தோழன் இடவக மன்னவனைத்
'தந்திர மன்னன் உதயணன் தன்நிலை சாற்றுகென'
முந்து நலமுனங் கூறுது முற்று துயருரைக்க
மந்திர யூகி மயங்கினன் என்றனை மாத்தமிழில். 17

ஆதலால் ஐய! அனுமன்நல் தேவியைக் கண்டுவந்து
காதலால் செய்தி கழறிடும் முன்னமே தென்திசையைத்
'தீதிலாள்' என்னத் தொழுதவக் காட்சியும், இன்னபிற
சேதிகள் யாவையும் சேர்த்தேன் இராமன் செழுங்கவியில். 18

தொட்டதும் உண்டு; தொடர்ந்ததும் உண்டுன தொல்நெறியை
விட்டதும் உண்டு; விளக்கலும் உண்டு; விழைவுறலால்
மட்ட துறைகளி வண்டென மன்னவ! உன்கவியில்
பட்டதிங் கென்னுளம் பாராட்டி நன்றி பகர்ந்தனனே! 19

ஆன்மிக வான்மீகி மேலோர்க் கருநன்றி யான்சொலுங்கால்
தான்மிக உம்பெருங் காதைக்கு முன்கதை தந்துசெலும்
தேன்சுவை யாக்கு குணாட்டியர், பின்னர்த் தொடர்புலவோர்
ஆன்றோர் அனைவோர்க்கும் என்நன்றி வைப்ப தருங்கடனே. 20

# 10. காரைக்காலம்மை

"சித்தன்"

காப்பு

தையல் சிற்றிடையாள், ஒரு தாழ்குழல்
உய்ய மற்றவள் உள்ளத் தொடுங்கினுன்;
வையம் முற்றும் வயிற்றின் அடக்கிய
ஐய னிற்பெரி யார்இனி யாவரே!

காரைக்காலம்மை துதி

வல்லானை, அண்டங்கள் வகுத்தானை,
அன்புக்கு வயமா வானை,
நல்லானைக் கால்மாறி நடிப்பானைக்
கொடுப்பானை, நவையில் மேரு
வில்லானை, ஒருமூன்று விழியானை,
விடையானை, விளம்பத் தாய்தான்
இல்லானை, அக்குறையும் இல்லாமல்
செய்தவளை எண்ணி வாழ்வாம்! 1

அன்பால் நெஞ்சம் உருகாரை
அடைந்தார்க் கெதுவும் நல்காரை
இன்பாய் உயிர்கட் கிரங்காரை
இனிய தமிழில் திளையாதாரைப்
பொன்பா வலர்க்கு வழங்காரைப்
புனித வதியார் பிறந்துயர்ந்த
கண்போல் குவளை மலர்காரைக்
காலில் தேடக் காண்போமோ? 2

மானுலாம் கரத்தான்; பிள்ளை
மதியுலாம் சிரத்தன்; முன்னம்
வானுலாம் புரத்தைச் செற்றோன்;
வலனுலாந் துடியன்; வெய்ய
கானுலாம் புலித்தோல் மாற்றிக்
கானிலந் தோய உன்கைத்
தேனுலாம் கனிக்குக் காரைத்
தெருஉலாம் விந்தை என்னே? 3

முன்னமரர் பிரமரொடு முனிவரர்கள்
ஞானியர்கள் முதலா னோர்கள்
பன்னிடுநல் வேள்விகளால் பயில்தவத்தால்
காணகிலாப் பரமன், தாய்நின்
தன்னிகரில் பத்திமைக்கோ தண்டமிழின்
சுவைதனக்கோ தருக னிக்கோ
இன்னருள்செய் துன்னில்லத் தெழுந்தருள
உளமுவந்தான் எதற்கோ வம்மா? 4

புவிநுகர் கனியாம் போகப்
புன்மையை விளக்கு தற்கோ,
செவிநுகர் கனிக்கோ, அன்றிச்
சீரதி மதுரம் தோய்ந்த
சுவைநுகர் கனிக்கோ, அம்மை
தூயவன் பெனுங்க னிக்கோ
கவிநுகர் கனிசேர் சோலை
காரைக்காற் கையன் வந்தான்! 5

அன்னைநீ அன்றரனுக் கிட்டதுதான் சோறோ?
ஆழ்கடலில் தோன்றுமுயர் இன்னமுதச் சாறோ?
என்னுளத்தின் இராமற்குக் குகன்தந்த தேனோ?
ஈசற்குக் கண்ணப்ப னிட்டசுவை ஊனோ?
முன்னர்ச்சா னகியிட்ட மெல்லடகி தென்கோ?
முனிவரர்கா னத்திட்ட முதிர்கனி கிழங்கோ?
மன்னுசடை யன்புலவர்க் கிட்டவிருந் தீதோ?
மாதேவன் மகிழ்ந்துண்ணக் காரணந்தான் யாதோ? 6

மாங்கனி விருந்தன் றிட்ட
மாதவச் செல்வி செய்கை
ஓங்கிய கானத் தன்றே
உளநெகிழ்ந் தன்பி னாலே
பாங்குடை யிராக வற்குப்
பரிவொடும் சபரி முன்னாள்
தீங்கனி விருந்தன் றிட்ட
செய்கையை ஒத்த தம்மா! 7

'நாயகன் காண்ப தற்கே
நல்லழ கென்னும் கொள்கை
தேயமே உணரச் செய்த
செந்தமிழ்ப் புனிதை! கள்ள
மாயமே வாழ்வென் றோர்ந்து
மதிதவழ் சடையான் தன்பால்
நேயமே நேய மென்று
நினைந்துபேய் வடிவம் பெற்றாய்! 8

ஊர்ந்தே கடந்தாய் உயர்மாமலை! ஒப்பில் ஈசன்
சார்ந்தே கடந்தாய் பிறவிக்கடல்! சாரும் ஊழை
ஓர்ந்தே கடந்தாய் உலகோரியல்! நில்லா உண்மை
தேர்ந்தே கடந்தாய் திருவோடழ கென்னுந் தீங்கே! 9

விடையின் மேவிய வித்தகன் தன்னைநீ
அடையக் கைலை அணைந்திடு பெற்றியைக்
கொடையன் நற்றமிழ்க் கொள்கையன் வெண்ணெயிற்
சடையன் தன்புகழ் என்றியான் சாற்றவோ? 10

தாயாகிய தலைமைபெறு தவமேநிறை புனிதை
பேயாகிய வடிவோடுயர் பிறவாநெறி பெறுவாய்!
தீயாகிய பெருமான்கழல் சிரமேகொளுங் கணமாய்
நீயாகிய அருமைதனை நினைவார்உள மகிழ்வார்! 11

மலையினால் கடலைத் தூர்த்த
மாக்குரங் கினையும் கண்டேன்;
சிலையிரா வணனை வில்லால்
செற்றவோர் நம்பி கண்டேன்;

கலையகத் தியனுர் வெற்றி
யாழினிற் கண்டேன்; உன்போல்
தலையினுற் கயிலை ஏறுந்
தவத்தியைக் கண்டி லேனே! 12

நீலங் காட்டிய நெஞ்சினன்; கையினிற்
சூலங் காட்டிய சுந்தரன்; நல்லுமை
கோலங் காட்டிய கூறினன் தன்னைநீ
ஆலங் காட்டினில் ஆடிட வைத்தயே! 13

இந்தளம்; நைவ ளங்கள்
எனுந்தமி ழிசையில் மூத்த
சந்தமார் பதிகம் முன்னம்
சாற்றிய புகழின் மிக்கோய்!
முந்தியப் பண்கட் 'கண்ட
முகடுறப் பாதம் வீசி''
அந்தணன் ஆடிற் றென்னில்
ஆர்நினக் கிணையிங் கம்மா? 14

பாட்டிற்குப் பேய்கள் ஆடும்;
பாகத்தில் மங்கை ஆடும்;
கோட்டினில் மலர்ந்த கொன்றை
குளிர்சடை ஆடும்; பாம்(பு)அவ்
ஆட்டினில் ஆடும்; எண்ணில்
அகிலமும் ஆட ஆலங்
காட்டினில் ஆடும் நம்பன்
கணத்தொடும் ஆடும் அன்னே! 15

கருணையே அறியாப் பேய்கள்
கணவரை மதியாப் பேய்கள்
தருகொடை தடுக்கும் பேய்கள்
தமிழினைக் கெடுக்கும் பேய்கள்
மருளினில் உழலும் பேய்கள்
ஆங்கிலை; மங்கை பங்கன்
அருள்நினைந் தாடும் பேய்கள்
அம்மையோ டாடும் அங்கே! 16

கண்டம் நீல மணிதாம்தாம்
கண்கள் கதிர்தீ மதிதாம்தாம்
துண்டப் பிறைமுத் தொளிதாம்தாம்
துடியும் இடிதாம் தாமெனவே
'அண்டம் உறவே நிமிர்ந்தாடும்
அப்பன்' கண்டென் தாயாடும்
கண்ட கணங்கள் தரும்இதுதான்
காணத் தருமென் முடினவே! 17

சந்தம் வல்ல தமிழணங்கைத்
தவமே வடிவாம் திருவுருவைப்
பந்தம் அற்றூர் வாழ்கயிலைப்
பாதம் மிதியாப் புனிதையினை
நந்தம் அடியார் முடிமணியை
நம்பன் அன்புக் கொருதாயை
அந்தம் ஒழித்த காரைக்கால்
அம்மை தன்னை வணங்குதுமே! 18

---

# 11. ஆழ்வார்கள்

திரு. கு. தேசிகன்

காப்பு

தன்னுளே உலகங்கள் எவையும் தந்து,அவை
தன்னுளே நின்று,தான் அவற்றைத் தாங்குவான்;
பின்இலன் முன்இலன், ஒருவன்; பேர்கிலான்;
தொன்னிலே ஒருவரால் துணியற் பாலதோ?

அம்போதரங்கவொத்தாழிசைக் கலிப்பா

(தரவு)

செங்கதிரோன் ஆயிரங்கைச் செழுங்கமல முகைதழுவ
அங்கதுதான் மலர்ந்தாலும் அம்மலர்தான் சுடராமோ?
எங்கள்பிரான் குணக்குன்றில் எழுஞ்சுடரே! மகிழ்மாற!
தங்குமுன தடிதாழத் தழைத்தசுடர் ஆவேங்காண்!

வேதங்கள் பரம்பொருளைத் தேடிடநின் வாய்மொழியிற்
பாதங்கள் தாம்காட்டப் பரம்பொருளும் சிறைப்படுமே
ஏதங்கள் சிறிதின்றி இடையின்றித் தடையின்றி
வாதங்கள் தாமின்றி வழிகண்டு மொழிந்தாய்!கேள்:

(தாழிசை)

தென்குருகூர்க் காவல! நின் திருவீதி எச்சிலினை
இன்புறவே சுவைத்தொருநாய் எய்துமுத்தி அறியேமோ?

ஆழ்வார்கள் பதின்மருனது அங்கங்க ளாய்இணைந்த
வாழ்வே!நீ பொன்னடிநம் பெருமாட்கு வாய்த்தனையே!

புற்பயிரும் சிற்றெறும்பும் போற்றுநித்தர் முத்தரெனக்
கற்பதுதான் காகுத்தன் கால்வண்ணம் என்றாய்நீ!

ஏக்கப் பெருமூச்சே 'இராமா-ஓ!' என்றிசைக்கும்
வாக்கின் பனையோலை வஞ்சிக்கோன் தந்தானல்.

ஏழைக்குகப் பெருமான் 'என்தோழன்' என்றோதும்
ஆழத் தொடரை அளித்தாரார் கலிவென்றார்.

'துயில்எழு! கணிகண ளெடுதொடர்! அறிதுயில்
மயல்மிகு மணிவண!' — மழிசையின் மணிமொழி

பொழிமழை—இருள்நிறை இடைகழி—அடியவர்
கொழிதமிழ் மொழிவிளக்கு உடையது கோவலாம்.

(அம்போதரங்கம்)

மணி மண்டபம்
பணி கொண்டவன்
அணி கொண்டவன்
பணி கொண்டுளர்

(தனிச்சொல்)

எனவாங்கு,

(சுரிதகம்)

ஆழ்வார் பாடலின் அடக்கங் கேண்மோ!
ஏழ்பார் உய்ந்திட ஈறிலாப் பேரறம்
கன்றெனத் துள்ளின் கறவை அவர்சொல்;
குன்றென நிற்பின் கொடுமுடி அம்மொழி;

கனியெனின் சாறு; பாலெனில் நெய்யாம்,
இனிமைப் பூவெனில் எழிலொடு மணமாம்;
காந்திடு மணியெனிற் கதிரோன்; யாழிசை
ஏந்திய கரமெனில் எம்முயிர்ச் சடையன்;
தெய்வம் தான்எனில் திருவடி யவர்சொல்;
செய்வகை திருந்தச் செய்தபின்
எய்துமெய்ப் பதங்கள் ஏத்திடு பதமே. 1

(வெண்பா)

மேவுபள்ளிப் பிள்ளை மிக்கெரியிற் பட்டாலும்
ஓவியம்போல் மேனி உருவேறும் — பாவனையால்
ஒட்டும் வினைத்தூற்றை ஓட்டியபின் நம்மாழ்வார்
கொட்டுமொழி வானமுதம் கூறு! 2

## புய வகுப்பு

கொட்டமிடு வாதியர் குனிந்துதலை சாய்ந்திடக்
 கோச்சடைய வர்மனவையில்
 நட்டதொரு தூண்தலை வணங்கியருள் பொற்கிழி
 நன்றெடுத் துயர்ந்ததோள்கள்;
பட்டமணி யானைநற் பவனியில் மாலவன்
 பறவைமேல் காட்சிநல்க
 இட்டமுடன் ஆணமணி தாளமாய் ஏந்தியே
 இசைமுழக் கிட்டதோள்கள்;
வெட்டுவன்,நீ யாரடா வேதியன் என்முனர்
 வினைய மந்திரம்வைத்தனை
 கட்டிவைத் தனபொருள் அசைத்திடற் கில்லையக்
 கவின்மறை காட்டுகென்றே
எட்டெழுத் தைப்பெற இறைமுனர் வாலிபோல்
 ஏற்றெழுந் துயர்ந்ததோள்கள்;
 பட்டர்பர காலனர் தோளழகு, பல்லாண்டு
 பலகோடி பதுமங்களே. 3

## கலியர்

கள்ளினை யுண்ணப் போங்கால் வாமனக் குறளாய்ப் போந்து
வெள்ளியை இகழ்ந்து வீசி வேண்டுவ உண்டு மீள்வோம்
ஒள்ளிய வடிவ மோங்கி உலகமுன் னடிக்கண் வைப்போம்
தெள்ளிய குருகூர் நம்பி தேமொழிக் கலயம் பெற்றே. 4

பெறலுண்டு தலைவன் இன்பம்; பெறுவிடில் மடல்தா னுண்டே,
விறல்கொண்ட மங்கை மன்னன் வீதிதான் டகம்ப டிந்த
உறவுண்டு பொங்கிப் பொங்கி உயர்களி யேற லுண்டு
நறவுண்டு மலைக்கும் பித்தர் நாங்களோ, சான்றோர் ஐயா! 5

## தவம்

மலைபெயர்த்தல் எளிதேகாண் உலகுய்ய
மாதவங்கொள் மாறன் சீரின்
நிலைபெயர்த்தல் நினக்காமோ நெடுமாலே
நீளடியைப் பெயர்த்து வைப்பாய்
சிலைபெயர்த்துப் பெண்ணுக்கும் சித்துஅறிவாய்
தவம்பூண்டும் சிலைகைக் கொள்வாய்
அலைபெயர்க்கும் கரைப்பொன்னி யாற்றுநடு
வுலகறியத் துயின்று யப்பா! 6

## மறம்

உலகு காக்க உயிர்து றக்கும் உண்மை பூத்த மறவரேம்
விலகு நாங்கள் பெரிய ரென்ற விறு கொண்ட தீதிலோம்
இலகு மெளியர் சிறுமை காட்டி இழிவு செய்யும் அவமிலோம்
அலகில் பெரியன் காரி மாறன் அடிக ளெங்கள் மகுடமே. 7

## சம்பிரதம்

குடப்பாம்பில் கையிடுவோம் கூற்றுவனுங் குடிபோகக்
கூத்தும் செய்வோம்
நடப்பாரார் அடியாரா! அவர்மிதித்து நெறியேறப்
படியே யாவோம்
எடுப்பாகக் குத்தவரும் பேரானைக் கோடுஈர
வாழைத் தண்டாய்
அடுப்பேற்றிக் கறிசமைப்போம் உண்பதற்குப் பொன்னனையே
அழைப்போ மையா! 8

## காலம்

மையார்ந்த கலிகெட்டே கிருதந் தோன்ற
மதுரகவி திருமுன்வாய் மலர்ந்த காலம்;
கைகால்கள் பெற்றிருந்தும் புளியம் பொந்தில்
கதியாகத் தெய்வமெலாங் காணுங் காலம்;

வைகாசி விசாகந்தான் முருகன் காலம்
வறையோட்டில் அமுதுவழிந் தோடுங் காலம்
நையாதீர் செந்தமிழைத் தேனிற் சேர்த்து
நாரணன்றுள் நன்கடையுங் குணங்கொள் காலம். 9

குணங்களையே பரம்பொருளாக் குறித்த காலம்
குறையுயிர்கள் அறம்ஒன்றில் நிறையுங் காலம்
வணங்கிடுவார் வைகுந்தம் புல்மு ளைக்க
வந்தடியார் உளத்துறையும் வசந்த காலம்
மணங்கமழும் மகிழ்மாறன் சொல்லுக் கேங்கி
மாலாகித் தெருத்தெருவாய் அடியார் பின்னர்
கணங்கொண்ட பூக்கொய்யக் கருத லின்றிக்
கனிகொய்யத் தீதின்றி வந்த காலம். 10

தீப்பிழம்பில் தாமரையும் பூக்குங் காலம்
தேடரிய சடங்கொழிந்து வேள்வி மாய
நாத்தழும்பிங் கேறிடவே பத்திப் பாடல்
நாடறியப் பண்ணுகி மணக்குங் காலம்
சாத்திரங்கள் வெறுங்குப்பை; தெய்வக் காட்சி,
சாதிநெறி கடந்தெவர்க்குஞ் சாருங் காலம்
யாப்பறிந்த புலவரெலாம் பொருளுக் கேங்கி
எவர்முன்னும் அசைபோட்டுப் பாடாக் காலம். 11

## ஊசல்

காலமெனும் மேற்கட்டி விரித்துக் கட்டிக்
களித்தாடிப் பூரங்கற் பூரங் காட்டி
மூலமெனும் மந்திரமே பலகை யாக்கி
முந்நான்கு துழாய்மாலை வடங்கள் சேர்த்தோம்;
சீலநிறை திருப்பாவை எங்கள் தாயே
சீரங்கன் கண்குளிரப் பலகை ஏறி
மேலணிந்த பூமாலை யசைந்தே யாட
மேவுமடிப் பொடிசூட ஆடீர் ஊசல். 12

## வாழ்த்து

ஆடும் கருடன் வாழியவே!
அனுமப் பெரியோன் வாழியவே!
சூடும் சங்கு சக்கரமும்
துலங்கி வாழ்க செங்கதிராய்! 13

# 12. மூவர் முதலிகள்

## திரு. சொ. சொ. மீ. சுந்தரம்

(காப்பு)

மூலமே இல்லா முதல்வனே! நீமுயலும்
கோலமோ யார்க்கும் தெரிவரிய கொள்கைத்தால்;
ஆலமோ? ஆலின் அடையோ? அடைக்கிடந்த
பாலனே? வேலைப் பரப்போ? பகராயே!

வெண்பா

பூவிரியும் வையைப் புனல்மங்கை யர்க்கரசி
காவிரித்தாய் பெற்றளித்த கற்பகத்தைப் — பாவிரித்துப்
பையவெனச் சொல்லிப் படர்மங் கலங்காக்கும்
தெய்வத் தமிழின் திறம். 1

கட்டளைக்கலித்துறை

திறங்கொண்ட ஆழியில் கல்மிதப் பிக்கும்; திருக்கயிலை
அறங்கண்ட செல்வனை ஐயா றதனில் அழைத்துவரும்;
மறங்கொண்ட பாம்பின் விடத்தினை மாற்றும்; மதகளிற்றைப்
புறங்கண்டு வென்றிடும் வாகீச மூர்த்தியின் பொற்றமிழே. 2

ஆசிரியப்பா

பொற்றமிழ் இன்பப் போதினைச் சூடி
நற்றவம் புரியும் நங்கையோர் பங்கன்,
செங்கண் ஏற்றவன், செஞ்சடைக் கடவுள்,
சங்கரன், ஒற்றைத் தவள்மதி புனைஅரன்,
தேரூர்ந் தின்பத் திருவருள் நல்கும்
ஆரூர் வீதியில் அடிமலர் சிவப்பக்

கல்லையும் உருக்கும் கற்புக் கனலிபால்
சொல்லின் செல்வன் தூதுசென் றதுபோல்
நந்தமிழ்த் தூதாய் நடந்திட வைக்கும்
சுந்தரச் செந்தமிழ் சொல்லுதற் கரிதே! 3

வெண்பா

தேவாரப் பாட்டில் சிறியனவே சிந்தியாக்
காவலனும் வாலியினைக் கண்டுரைத்தாய் — பூவுலகில்
காழியிலே நீபிறந்தாய், காவிரியில் நான்தவழ்ந்தேன்
வாழியெனக் கீந்தாய் வழி. 4

கட்டளைக்கலித்துறை

வழிந்தே பெருகி வளர்புனல் ஈசனூர் வாக்கரசாய்ச்
செழுந்தேன் தரும்நின் திருமுடி மீதிட்ட சேவடியைக்
'கொழுந்தே' எனவுயர் கற்பின் கனலியைக் கூறவைக்க
எழுந்தே புரக்கும் இராகவன் காதை எடுத்தனனே. 5

ஆசிரியப்பா

எடுத்த சேவடி ஈசனூர் உன்னைத்
தடுத்தாட் கொள்ளத் தான்வருங் காலை,
கண்ணெனத் தோன்றும் கயிலையை விட்டே
வெண்ணெயில் சடையன் விளைவென வந்தார்.
கண்ணுதல் ஒழியக் கயிலை என்செயும்?
விண்ணிடை அவரடி மேவப் பறந்திடும்.
அன்றைக் காட்சியை அன்னையைத் தேடிச்
சென்ற மாருதி திறத்தினிற் சொன்னேன்.
திருப்பாட் டுரைக்கும் திருவா ரூர!உன்
விருப்புறு செஞ்சொல் எனக்குயர் வேதமே. 6

வெண்பா

வேதங்கள் காட்டும் விளக்கங்கள் யாவுந்தன்
பாதங்கள் ஆன படிவத்தைச் — 'சோதி
இவன்'என்று காட்டும் எழிற்காழி நாதன்
சிவனென்றே கொண்மின் தெரிந்து. 7

கட்டளைக்கலித்துறை

தெரிந்தே மறையின் கதவந் திறக்கும் திருமொழியால்
சரிந்தே வருத்திடும் நெஞ்சக் கதவிதன் தாள்திறவாய்

விரிந்தே புரக்கும் சடையுடை வேதியன் மெய்யருளால்
எரிந்தே வருத்திடும் சூலையின் ஆற்றல் எரித்தவனே! 8

ஆசிரியப்பா

எரித்திடு நெருப்பை எழிற்கரம் ஏற்க
விரித்திடு கங்கை வியன்சடை ஏற்றவன்
ஒருமணம் மாற்றி இருமணம் பரப்பத்
திருமணங் கண்ட திருவா ரூர!
உற்றவர்க் கென்றும் உதவிடும் அறிவு
முற்றிய பித்தன் மொழிந்தஉன் சொல்லைத்
திருப்பாட் டிற்குள் திகழ்முதற் சொல்லாய்
விருப்புடன் ஏற்க விழைந்தமை யதனால்
காப்பாய் இருந்து கரக்கும் கணிச்சியோன்
ஏற்பான் அன்பால் எறிந்திடும் கல்லே. 9

வெண்பா

கல்லையொரு பெண்ணாக்கும் காகுத்தன் போலெனும்பை
மெல்லிசையால் பெண்ணாக்கும் வித்தகனே! — சொல்லும்
மறைக்கதவம் பூட்டி மனக்கதவின் உள்ளே
கறைக்கண்டன் சேவடியைக் காட்டு. 10

கட்டளைக்கலித்துறை

காட்டில் திரியும் களிற்றினில் ஈசனைக் கண்டுகொண்டாய்
பாட்டில் உயர்ந்திடு 'மாதர் பிறைக்கண்ணி' பாடலுற்றாய்
திட்டவொண் ணாஎழிற் சிதையும் உன்தவம் செய்தனளோ?
பூட்டுவில் ராமனைப் போதகம் கண்டுளம் பூத்தனளே. 11

ஆசிரியப்பா

பூத்திடு கொன்றைப் புண்ணியர் சேவடி
சேர்த்திடு நீள்முடித் திருவா ரூர!
ஊழியில் ஒருவன் உலகெலாம் அழிப்போன்
தோழமை என்றவன் சொல்லிய சொல்லால்
மாதினைத் தந்தும் மகிழடி இருந்தும்
தூது நடந்தும் தொல்லறம் காத்தான்.
வேட்டுவன் கண்ணை விரும்பினேன் போல
வேட்டுவக் குகனும் விளங்கிட வைத்தேன்.
தோழமைச் சொல்லின் ஆழ முணர்த்தினை.
வாழிஆ ரூர!நின் மலரடி தானே. 12

வெண்பா

தானேங்கு கோசிகனுர் தம்வழியே சென்றதற்கும்
வான்தோய் மழுவாளி வந்ததற்கும் – யானெடுத்துச்
சம்பந்தம் காட்டவுயர் சந்தம் எனக்களிக்கும்
சம்பந்தன் ஞானத் தமிழ். 13

கட்டளைக்கலித்துறை

தமிழ்தரு நாவுக் கரசெனச் சொல்தரு தாண்டகத்தாய்!
'நமசிவா யக்கனி' என்றுநீ ஈசன் நலமுரைத்தாய்.
அமுதெனும் சீதையும் தன்னுசை யின்கனி ஐயனென்பாள்.
இமையவர் வாழ்த்திடும் பத்தியன் றேஇதை எண்ணியதே! 14

ஆசிரியப்பா

எண்ணரும் ஈசன் வண்ணவந் தாதி
திண்ணமாய்ச் சொல்லும் சேரமான் தோழ!
அன்றுநீ கயிலே அனிந்திதை கமலினி
என்றிவர் தம்மை எய்தநோக் கினையால்;
நல்லறம் பாட நாட்டினில் வந்தாய்;
வில்லறம் காக்க விழைந்திடும் ராமனும்
அண்ணலும் நோக்க அவளும் நோக்க
எண்ணிலா நன்மை எழுந்தது கண்டோம்.
சொல்லும் வில்லும் தோற்றிய நோக்கம்
அல்லவர் தம்மை அழித்தெழுந் ததுவே. 15

வெண்பா

வேதமுறை மேனியிலே 'வெய்யோன் ஒளி'மறையச்
சீதையுடன் செல்லும் திருமகனே – ஓதிடவே
தண்ணமுதக் காழியர்கோன் சந்தமளித் தாண்டகதை
'அண்ணு மலே'யான் அருள். 16

கட்டளைக்கலித்துறை

'அருள்தரு கைகொடு'த் தாட்கொளும் ஈசன் அணிமுடியை
இருள்தவிர் 'ஆயிரம் ஞாயி'றென் றேமனத் தெண்ணிநின்ருய்.
திருவளர் நாவுக் கரச!உன் சொல்போல் திகழ்கதிர்கள்
மருவளர் கண்ணுதல் வான்சடை என்றுநான் வைத்தனனே. 17

ஆசிரியப்பா

'வைத்தனன் தனக்கே தலையுமென் நாவும்
இத்தரை மீதில்' என்றுரை செய்து
சொன்னலம் காட்டும் சுந்தர மூர்த்தி!
என்ன பொருத்தம் எனக்கும் உனக்கும்!
உன்னைச் சடையன் ஒளிபெற வைத்தான்
என்னையும் சடையன் எடுத்து வளர்த்தான்;
வெண்ணெய்ப் பதியுன் வேதியன் பதியாம்
கண்ணாய் என்னைக் காத்ததும் அதுவே.
'உன்றன் தோழன்' என்றால் சிவனார்
'என்றன் தோழன்'என் றென்னைஏற் பாரோ? 18

வெண்பா

பார்புரக்கும் மீனாட்சி பங்காளன் சந்நிதியில்
சீர்புரக்கப் பாடும் சிவக்களிறே! — மார்பிருக்கும்
அம்பாலே ஆண்டவன்பால் அன்புசெயும் வாலியின்சொல்
சம்பந்தா! உன்திறமை தான். 19

கட்டளைக்கலித்துறை

தானுயர் கங்கை மணலென இந்திரர் தாமழிந்தார்
ஏனையோர் மாய்வரால் 'ஈறிலான் ஈசனே' என்றுரைத்தாய்.
தேனெனும் பாட்டுத் திருக்குறுந் தாண்டகம் செப்புவபோல்
யானுரை தந்தனன் மாதுமை பங்கனை ஈசனென்றே. 20

ஆசிரியப்பா

ஈசன் அடியார்க் கடியேன் என்று
தேசு மிகுந்த திருத்தொண் டத்தொகை
திறமுடன் சொன்னதால் திருமுடி மீது
பரமன் திருவடி பலதரம் வைத்தான்;
கங்கை வேடனைக் கைதொழு திருக்கும்
பங்க மில்குணப் பரதனை உணர்ந்தே
எம்பிரான் பாதுகை இளையவற் களித்தான்;
தம்பியும் தோழனும் தன்னடி யாரை
ஏத்தி மகிழ்ந்தால் இணையடி பெறலாம்
கூத்தன் கூத்தின் குறிப்புணர்ந் தேனே. 21

### வெண்பா

தேனூர் அமுதம் திரட்டிக் கொடுத்தவனைத்
தானுயர்ந்த கள்வனெனும் சம்பந்தா! — மோனமுனி
பின்சென்ற ராமனையும் பெண்ணமுதம் கள்வனென்றுள்
மன்னுலகில் பத்தியிது வா? 22

### கட்டளைக்கலித்துறை

'வானவர் போற்றிடும் வள்ளலென் கண்வழி வந்துவிட்டான்!
நானினிச் சாளரம் மூடுவன்' என்றவள் நன்குரைத்தாள்.
'தேனெனும் கண்ணுதல் கண்ணுளான்' என்றுநீ செய்துவைத்த
ஞானமார் செந்தமிழ் சென்றதோ கோசல நாட்டினுள்ளே! 23

### ஆசிரியப்பா

உள்ளக் கமலத் துருப்பெறும் தியாக
வள்ளல் மணந்தர மகிழ்ந்தஆ ரூர!
தங்கு வேற்றுமைச் சாதிகள் மறையச்
சிங்கடி வனப்பகை அப்பனென் றுன்னைப்
பாட்டில் உரைத்த பண்பது போல
நாட்டில் உயர்ந்த நாயகன் தானும்
காட்டரக் கன்தனைக் கவிக்குலத் தரசை
வேட்டுவக் குகனை விரும்பினன் தம்பியாய்;
'உந்தை'என் றுரைக்கும் ஒப்பிலாப் பண்பிற்
சுந்தர ராமன் சொல்கடந் தானே. 24

### வெண்பா

தானே இருந்த சனகன் குயில்வருத்தம்
வான்தோய் அசோக வனத்திடையே — நானுரைக்கச்
சம்பந்தன் தந்தான் 'சடையாய்' எனும்விருத்தம்
எம்பந்தம் நீக்க இசைந்து. 25

### கட்டளைக்கலித்துறை

இசையும் தமிழும் எழிலுறப் பாடும் இயல்புடையாய்!
தசையும் எலும்பும் சரிந்திடக் காட்டுத் தடங்கிடந்தாய்.
வசையற் றுயர்ந்திடும் வள்ளலும் நீயும் மலர்பதிக்கும்
திசையில் கிடந்திடும் கற்களன் றோதவம் செய்தனவே! 26

ஆசிரியப்பா

செய்ய மேனித் திருநீ றுடும்
ஐயன் பாதத் தருந்தமிழ் அதனுல்
கரைக்கால் முதலை பிள்ளை கொடுக்க
உரைப்பாய்! உன்றன் அருளை உணர்ந்தேன்!
அன்னை நெஞ்சத் தருந்துயர் கண்டு
தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயுவும்
அரக்கன் தம்பியைத் தன்பின் ஞக்கி
இரக்கங் காட்டும் இராமனும் உன்போல்
மற்றோர் துன்பம் மனங்கொளார்; இந்தப்
பெற்றியர் பெருமை பேசவொண் ணுதே! 27

வெண்பா

தேசுற் றொளிரும் திருஞான சம்பந்தன்
வாசத் தமிழின் மணமன்றோ — நேசமுடன்
தெய்வத் தமிழினிமைத் தென்றலென வீசியுயர்
வையம் புரக்கும் மணம்! 28

கட்டளைக்கலித்துறை

மணங்கொண் டிருக்கும் மலைமகள் அஞ்ச மலையெடுத்தான்
குணங்கண் டிறைவன் கொழுந்தெடுத் தூன்றிடக் கும்பிடுவான்.
இணங்கும் நிலையைப் பதிகமெல் லாமும் எடுத்துரைத்து
வணங்கிடும் அப்பர் மலரடி என்றன் மனத்ததுவே! 29

ஆசிரியப்பா

மனத்தகத் தானை, வழிபடும் தொண்டர்
இனத்தகத் தானை ஏற்றநட் பாக்கிச்
செங்கலைத் திருத்தித் தங்க மாக்கினை!
மங்கல நெற்கதிர் மலையாய்ப் பெற்றனை!
பாரில் நட்புப் பண்பினைக் காட்டச்
சேரர் கோனையும் சேர்த்துடன் சென்றனை!
வெண்ணெச் சடையன் வேதிய ஞகிக்
கண்ணைத் தந்து கவிபெற வைத்தனை!
ஆற்றில் இட்டுக் குளத்தில் எடுத்தனை!
போற்றிஆ ரூர!நின் பொன்னடிப் பூவே. 30